மொழிபெயர்ப்பு ஆய்வு நூல் வரிசை– 3

# கவிதை மொழிபெயர்ப்பு

முனைவர் செ. இராஜேஸ்வரி



சந்திரோதயம் பதிப்பகம்
மதுரை. Ph. 7010997639

## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கவிதை மொழிபெயர்ப்பு |
| துறை | : | மொழிபெயர்ப்பு ஆய்வு |
| ஆசிரியர் | : | முனைவர் செ. இராஜேஸ்வரி |
| வடிவமைப்பு | : | செ. மீனாட்சி |
| பதிப்பாளர் | : | சந்திரோதயம் பதிப்பகம்<br>*3/422,* திருவள்ளுவர் தெரு<br>தினமணி நகர், மதுரை *– 625 018* |
| பதிப்பு | : | டிசம்பர், *2021* |
| மொழி | : | தமிழ் |
| பக்கங்கள் | : | *116* |
| விலை | : | *Rs.200/-* |

- - - - -

| | | |
|---|---|---|
| Book | : | Kavithai Mozhipeyarppu |
| Subject | : | Translation Studies |
| Author | : | Dr.C.Rajeswari, M.A., M.Phil., Ph.D., |
| Designer | : | C. Meenatchi |
| Publisher | : | Chandrothayam Pathippagam<br>3/422, Thiruvalluvar Street<br>Dinamani Nagar, Madurai-625 018 |
| Publish | : | December, 2021 |
| Pages | : | 116 |
| Price | : | Rs.200/- |

# அன்புக் காணிக்கை



*மொழிபெயர்ப்புச் சிக்கல்கள் பற்றி*
*மொழியியல் துறையில் ஆராய்ச்சி*
*செய்தவரும் அக் காலத்தில் எனக்குப்*
*பல்வேறு மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்களை*
*வழங்கி உதவியவருமான ஆய்வறிஞர்,*
*அமெரிக்க மாணவர்களின் தமிழாசிரியர்,*

**முனைவர் J. அருண் ராஜசெல்வன்**

*அவர்களுக்கு இந்நூல் அன்புக் காணிக்கை.*

# நூலாசிரியர் முனைவர் செ. இராஜேஸ்வரி



*முனைவர்* **செ. இராஜேஸ்வரி** *மொழிபெயர்ப்பாளர், மொழியியலார், எழுத்தாளர், எம்ஜிஆர் திரைப்பட ஆய்வாளர், கல்லூரிப் பேராசிரியர், சமயப் பண்பாட்டு ஆய்வாளர், மொழி பெயர்ப்பியல் துறையில் முனைவர் பட்டம் பெற்றவர்.* **புலமை, செந்தமிழ், வளர்தமிழ், ஓங்குதமிழ், நா.வா.வின் ஆராய்ச்சி** *போன்ற ஆய்விதழ்களில் இவருடைய ஆய்வு கட்டுரைகள் வெளிவந்தன.* **மொழி பெயர்ப்பியல் ஆய்வு** *என்ற ஆய்வு கட்டுரைகள் அடங்கிய நூல் ஒன்றை 1992இல் வெளியிட்டார். இந்நூல் இணையத் தமிழ் பல்கலைக்கழகத்தின் மின் நூல் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.*

*1988 முதல் தமிழ் ஆங்கில மொழி பெயர்ப்புப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். பல துறை சார்ந்த பனுவல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.*

*1993இல் ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் இணைப் பதிப்பாசிரியராகப்* [Associate Editor] *பணியாற்றினார். ஜப்பானிய மொழியைத் தமிழில் கற்பது எளிது என்பதை அறிந்து அதற்கான நூல் உருவாக்கும் பணியில்*

*ஜப்பானியப் பெண் யூகோ ஃபுகுரோயியுடன் இணைந்து செயல்பட்டார். அந்த நூல் மூன்று பாகங்களாக வெளிவந்துள்ளது. ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் வெளிநாட்டு மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். தமிழ் மாணவர்களுக்கு ஜப்பானிய மொழி இலக்கணம் கற்பித்தார். யுக்கோ சான் அம்மாணவர்களுக்கு ஒலிப்பயிற்சி அளித்தார்.*

*1986 முதல் சமயச் சொல் அகராதி, எபிரேயம் - தமிழ் அகராதி; கிரேக்கம் - தமிழ் அகராதி உருவாக்கத்திற்காக மக்கள் கல்வி அறக்கட்டளையின் இயக்குனர் மறைதிரு இராபின்சன் லேவி ஐயா அவர்களுடன் இணைந்து இருபது ஆண்டுகள் தீவிரமாகப் பணியாற்றினார். ஈரோடு மகளிர் கலை, அறிவியல் கல்லூரி, திருச்சி* **ஸ்ரீ***மத் ஆண்டவன் கலை, அறிவியல் கல்லூரி, மதுரை அமெரிக்கன் கல்லூரி ஆகிய கல்லூரிகளில் சில ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினார்.*

*2000இல் மதுரையில் அமெரிக்காவின் விஸ்கான்சின் பல்கலைக்கழக மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். வெளி நாட்டவருக்கு தமிழ் கற்பிக்கப் பாட நூல் ஒன்றை உருவாக்கினார். அரவிந்த் கண் மருத்துவமனையில் மொழி பெயர்ப்பாளராகவும் வேற்று மாநிலம் மற்றும் வெளிநாட்டு மருத்துவர்களுக்கு, தமிழ் ஆசிரியராகவும் பணியாற்றினார். அப்போது*

தமிழ் தெரியாத கண் மருத்துவர்களுக்குத் தமிழ் கற்பிக்க *Tamil for Non-Tamils* என்ற பாடநூலை உருவாக்கினார். இன்றும் அந்தப் பாடநூல் அங்குப் பயன்பாட்டில் உள்ளது. அது போல அங்குச் செவிலியர் பயிற்சி பெறும் இளம் பெண்களுக்கு ஆங்கிலம் கற்பிக்க Easy English என்ற ஆங்கிலப் பாடநூலை உருவாக்கினார். மக்கள் கண்காணிப்பகத்தில் வெளி மாநிலத்தவருக்கு ஆங்கிலமும் வெளி நாட்டவருக்குத் தமிழும் கற்பித்தார்.

தமிழ் கற்கும் வெளிநாட்டு மாணவர்களுக்காக சென்ட்டர் ஃபார் லேங்குவேஜ் ஸ்டடீஸ் [Centre for Language Studies] என்ற பெயரில் தனி மையம் ஒன்றை அமைத்து அவர்களுக்குத் தமிழ் கற்பித்தார்.

எம்.ஜி.ஆர். பற்றி "ஒப்பனையும் ஒரிஜினலும் எம்.ஜி.ஆர். 100" என்ற தலைப்பில் விகடன்.காமில் முப்பது கட்டுரைகள் வெளியிட்டார். அதன் தொடர்ச்சியாக கனடாவில் இருந்து வரும் www. tamilauthors.com என்ற இணைய இதழில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதினார். எம்.ஜி.ஆரின் ரசிகர் மன்றங்களின் தனித்தன்மை குறித்து ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். தற்போது வெற்றித் திருமகன் என்ற பெயரில் தொடங்கும் வரிசையில் இருபத்தோர் நூல்கள் வெளிவந்துள்ளன.

தஞ்சையைச் சேர்ந்த தமிழ் இலக்கியச் செம்மல் கவிஞர் முத்தமிழ்விரும்பி அவர்களின் எட்டு கவிதை நூல்களை இவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இந் நூல்களைச் சென்னை

எமரால்டு பதிப்பகமும், ஆஸ்திரேலியாவின் மூன்ஸ்டோன் பதிப்பகமும் வெளியிட்டுள்ளன.

தமிழிலக்கியச் செம்மல் கவிஞர் பொறிஞர் முத்தமிழ்விரும்பி அவர்களின் நூல்களின் தொகுப்புகளில் உள்ளடக்கப் பகுப்பாய்வு மேற்கொண்டு அவற்றை நான்கு **கவிதைத் திறனாய்வு நூல்களாக** வெளியிட்டார்.

சமூக பண்பாட்டு ஆய்வு நூல் வரிசை என்ற தலைப்பில் ஆறு நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்.

கோவை பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை மேனாள் தலைவர் பேரா. முனைவர் ஞானசேகரனின் ஐந்து நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். இவற்றில் முதல் மூன்று நூல்களை மூன்ஸ்டோன் பப்ளிகேஷன்ஸ் வெளியிட்டுள்ளது.

மொழிபெயர்ப்பு மற்றும் ஆய்வு நூல் வரிசையில் இவர் ஐந்து நூல்களை எழுதியுள்ளார். முதல் நூலை நெருஞ்சி இலக்கிய இயக்கமும் மற்ற நூல்களை, சந்திரோதயம் பதிப்பகமும் வெளியிட்டது.

இவர் **Love Thamizh** என்கிற பன்மொழி மின்னிதழின் ஆசிரியர். இவ்விதழில் தமிழ் மொழி, வரலாறு, பண்பாடு குறித்த ஆங்கிலக் கட்டுரைகளை வெளியிடுகிறார். தமிழ் மற்றும் பிற மொழிகளுக்கு இடையில் மொழி பெயர்க்கப்பட்ட கவிதைகளை இந்திய மற்றும் ஐரோப்பிய மொழிகளில் வெளியிடுகிறார்.

***சென்னைப் பெருநகராட்சியின் முன்னாள் மேயர் மனிதநேயச் செம்மல் சைதை சா. துரைசாமி அவர்களின் சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும்*** என்ற பெயரில் ஒரு நூல் எழுதி வெளியிட்டார். இவர் எழுதிய சிறுகதைகள் 'அமராவதியின் காதல்' என்ற பெயரில் தொகுக்கப்பட்டு வெளிவந்தது. நெருஞ்சி இலக்கிய இதழில் இவரது கட்டுரைகள் வருகின்றன. இவர் எழுதிய "என்னோட ராசி நல்ல ராசி" என்ற தொடர் வாரந்தோறும் **தினகரன்** நாளிதழின் ஜோதிட மலரில் வருகிறது. மாதமிரு முறை வரும் **ஆன்மீகம் இதழில்** (தினகரன் வெளியீடு) இவரது கட்டுரைகள் தொடர்ந்து இடம் பெறுகின்றன.

**எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்**

*1-21. வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர். என்ற பெயரில் தொடங்கும் வரிசையில் 21 நூல்கள்.*

22. *சென்னைப் பெருநகராட்சியின் முன்னாள் மேயர் மனித நேயச் செம்மல் சைதை சா. துரைசாமி அவர்களின் சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும்*

**மொழிபெயர்ப்பு**

**ஆங்கிலம் ⟶ தமிழ்**

23. Indian Women-Changes and Challenges (**இந்திய பெண்கள் - சாதனைகளும் சவால்களும்**)
24. The Globalisation : An Urban Theology (**உலகமயமாக்குதலும் நகரிய இறையியலும்**)

25. Water Privatisation (for PET, Madurai) (**தண்ணீர் தனியார் மயமாக்கல்)**
26. Assisted reproductive technologies and its Impact on Women (SIRD, Madurai)
27. Eco Vision and Mission
28. Bachelor's Study Materials for Social Science [IGNOU, Madurai]

* Foreign News Kamalam Info

* News, P. Gurus.com

* Articles on Eye Care, Aravind Eye Hospital, Madurai

**தமிழ் ⟶ ஆங்கிலம்**

**கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகள்**

29. Shade of the Flowering Tree
30. Songs of Dryness
31. Speaking with You
32. Therapist of the Finest Art
33. Language of Love
34. A Lady at the little gate
35. Honey Hive
36. Ambrosial Kiss (Editor)
37. Following Dusty Feet (in print)

**பேரா. முனைவர் ஞானசேகரனின் நூல்கள்**

38. Emerging Mallarism
39. Festival of lord Indra
40. Role of Devendirar's in Indian war of Independence (Sundaralingam)

41. Re-reading of Pallu literature
42. Mallariyan Literature
43. Frontyard without My Dad (Poem)

**மொழிப் பாடநூல்**

44. Easy English
45. Tamil for Non-Tamils

**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

*46. பண்பாட்டு நகர்வுகள் - தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு*
*47. பெண் தெய்வ வழிபாடு*
*48. தேவேந்திரன்*
*49. மருதநிலப் பெண் தெய்வங்கள்*
*50. இருநிலத்தில் திருமுருகன்*
*51. முன்னோர் வழிபாடு*
*52. வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும்*
*53. யானைக் கடவுள்*

**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

*54. பாடுபொருளும் பாசப்பொருளும்*
*55. பூ மர நிழலின் களமும் காலமும்*
*56. "2020 தைமாதத்தில் இன்று" கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு*
*57. கவிதையில் காதல்*
*58. கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள்*

**மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்கள்**

59. *மொழிபெயர்ப்பியல் ஆய்வு*
60. *கவிதை மொழிபெயர்ப்பு*
61. *நவீன மொழிபெயர்ப்பு உத்திகள்* (Co-author)

**ஆங்கிலக் கவிதை மொழி பெயர்ப்பு**

62. *எட்டுத்திக்கும் செல்வீர்*
63. *அவன் கடவுளுக்கு நிகரானவன்*
64. *செக்கச் சிவந்த ரோஜா*
65. *கலீல் ஜிப்ரானின் "மணலும் நுரையும்"*
66. *கலீல் ஜிப்ரானின் "பாடல்கள் 14"*

**சிறுகதைகள்**

67. *அமராவதியின் காதல்*



# உள்ளடக்கம்

முனைவர் செ. இராஜேஸ்வரி

# 1. கவிதை மொழிபெயர்ப்பு

மொழிபெயர்ப்பில் கவிதை மொழிபெயர்ப்பு என்பது சிக்கலானதும் சவாலானதும் ஆகும். கவிதையில் வடிவம் மட்டுமல்ல அதன் பொருள்கோள் முறையும் சிக்கலானது. சொற்பொருளைக் கொண்டு மொழிபெயர்க்க இயலாது. சில இடங்களில் சொற்பொருள் சரியாக இருந்தாலும் மொழிபெயர்ப்பை வாசிக்கும் இலக்குமொழியாளருக்கு மாறுபட்ட விளைவை ஏற்படுத்தும். கவிதையில் சொல் – பொருள் - விளைவு என்ற மூன்றும் இன்றிமையாதனவாகும். இதனால் தான் கவிதை என்பது பொருள் தருவது அல்ல அதுவாகவே இருப்பது அதாவது உணரச் செய்வது [Poem should not mean but be] என்றனர்.

கவிதை மொழிபெயர்ப்பு இலக்கிய மொழிபெயர்ப்பு வகையைச் சார்ந்தது ஆகும். இலக்கிய மொழிபெயர்ப்பு என்பது பொருள்

கொள்வதில் மரபு சார்ந்ததாக எப்போதும் இருப்பதில்லை. அது தனக்கென்று தனித்த வடிவும் அழகும் கொண்டது. கவிஞனின் உள்ளத்தில் தான் வடிவும் அழகும் முடிவாகின்றது. கவிஞனுக்கு உள்ள சுதந்திரம் அதை உறுதி செய்கிறது. அன்றாட மொழிவழக்கில் இருந்தும் கவிதையின் மொழிநடை வேறுபடலாம். அணி நயம், உவமை, உருவகம் என்று பல்வேறு கவிதை உத்திகள் கவிதைக்கு செழிப்பூட்டுகின்றன. மொழிபெயர்ப்பில் இவை அனைத்தையும் கருத்தில் கொள்ள வேண்டும். மொழிபெயர்ப்பாளருக்கு கவிதை மொழிபெயர்ப்பில் ஆர்வம் இருந்தாலும், இச்சிக்கல்களுக்கு இடையே இப்பணி, சுமையாகவும், அதிக நேரம் எடுப்பதாகவும் அமைகிறது.

## அழகும் நேர்மையும்

கவிதை மொழிபெயர்ப்பு அழகாக இருந்தால் நேர்மையான மொழிபெயர்ப்பாக இருக்காது; சரியாக மொழிபெயர்த்தால் அது அழகாக இருக்காது என்றொரு கருத்து வெளிநாட்டில் வெகு காலமாக இருந்து வருகிறது. இதற்கு உவமையாக அழகான மனைவி விசுவாசமானவளாக இருப்பதில்லை; விசுவாசமான மனைவி அழகாக இருப்பதில்லை என்றும் சொல்லி வருகிறார்கள். கிரேக்க இலக்கியங்களின் மீதான அளவற்ற மதிப்பு அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க முனைந்த போது இவ்வாறான அவநம்பிக்கை நிறைந்த

விமர்சனங்களை முன் வைத்தது. எப்போதுமே மூலமொழி மீது அறிஞர்களுக்கு மதிப்பு அதிகம், அது தரு மொழி என்பதால் அதனை உயர்வாகக் கருதினர். எப்போதுமே அது தரு மொழியாகவே இருப்பதில்லை. வேறொரு மொழியில் இருந்தும் அதற்கு மொழிபெயர்ப்புகள் வரக்கூடும்.

ஷேக்ஸ்பியர் நாடகங்கள் செய்யுள் வடிவிலானவை, அவற்றை, தமிழில் மொழிபெயர்க்கும் பொது ஆங்கில வாசகர்களும், அறிஞர்களும், ஆங்கிலத்தைப் போல இல்லை என்று விமர்சிப்பதுண்டு. அது போல சங்க இலக்கியத்தை ஆங்கிலத்தில் செய்யுள் வடிவில் மொழிபெயர்த்த போது நிறைய தகவல்களை நேரடியாக மொழிபெயர்ப்பில் தர இயலாமல் நூலின் இறுதிப்பகுதியில் விளக்கங்கள் கொடுத்தனர். அப்போது தமிழறிஞர்கள் தமிழின் செம்மை ஆங்கிலத்தில் இல்லை என்று கருதினர். இது சொந்த மொழி அல்லது மூல மொழி மீதான பற்றின் காரணமாக வெளிவந்த கருத்துகள் ஆகும்.. மொழிபெயர்ப்பின் சிக்கல்களை உணர்ந்தோர், இப்போது இவ்வாறு கருத்து தெரிவிப்பதில்லை.

## மூன்று நிலைகள்

கவிதை மொழிபெயர்ப்பில் சொல் [Linguistic], பண்பாடு [Cultural], மறு படைப்பு [Recreative] என்ற மூன்று நிலைகள் உண்டு. சொற்களை மொழிபெயர்க்கும் போது அதன் இலக்கண

அமைப்பு, சொற்பொருள் [Lexical/Textual Meaning], சூழற் பொருள் [Contextual Meaning] உட் பொருள் Inner Meaning/ Apocalypse] என்ற வகைகளை ஆராய்ந்து பொருளை அறிந்து அதற்கு இணையான இலக்கு மொழிச் சொற்களை, தெரிவு செய்து மொழிபெயர்ப்பில் தர வேண்டும். சூழற்பொருள் என்பது குறிப்பிட்ட சொல்லுக்கு இந்தக் கவிதையில் என்ன பொருள் என்பதை அறிந்து அதற்குரிய நிகரனைத் தேட வேண்டும். உட்பொருள் என்பது மறை பொருள் என்றும் அழைக்கப்படும், சொற்பொருள் சரியாக இருக்கும்படி மொழிபெயர்த்தாலும், அந்த கவிதையில் அதன் பொருள் அதுவல்ல, அச்சொல் வேறொன்றை மறைமுகமாக உணர்த்துகிறது என்றால் அதனை மறைபொருள் என்போம்.

## சொற்பகுப்பாய்வும் மொழிபெயர்ப்பும்

எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்றார் தொல்காப்பியர். கவிதையில் சொற்பொருள் என்பது பல அடுக்கு நிலைகளில் பொருள் தருவதுமுண்டு. இதனால் ஒரு மொழிபெயர்ப்பாளருக்கு, கவிதையை மொழிபெயர்க்க சீரிய மொழித்திறனும் கவித்துவமும் தேவைப்படுகிறது. கவிதை என்பது சொற்களால் ஆனது என்றாலும் வெறும் சொற்களால் மட்டும் அது அழகும் பொருளும் உணர்ச்சியும் தருவது கிடையாது. சொற்களின் சிறப்புச்சேர்க்கை, வரிகளின் வரிசை

அமைப்பு, கவிதையின் தொடக்கமும் முடிவும் என்று பல காரணிகளால் கவிதை என்பது கவிதைக்குரிய அழகைப் பெறுகின்றது. கவிதைக் கொள்கையை ஆராய்ந்து பார்ப்பது கொலைக்குச் சமம் என்று கருதுகின்றனர்.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில், ஜெயகாந்தனின் படைப்புகளைப் பற்றி ஒரு கருத்தரங்கு நடந்த போது அவர், 'நான் உயிருள்ள படைப்பை அளித்தேன். நீங்கள் அதற்கு சவப்பரிசோதனை செய்துவிட்டீர்கள்' என்றார். எனவே கவிதையை முழுமையாகப் படித்து இன்புற வேண்டுமே தவிர அதனை அக்கு வேறு ஆணி வேறாக பகுப்பது அடாத செயல், என்பது கவிதை ரசிகர்களின் கருத்தாகும். எனினும் மொழிபெயர்ப்பாளர் அப்படியே கவிதையை வாசித்துவிட்டு மொழிபெயர்த்தால் அது இன்னொரு கவிதையாக வருமேயன்றி மொழிபெயர்ப்பாக இராது. அதனைத் தழுவல் என்றே சொல்ல முடியும். சில சமயம் மொழியாக்கமாகவும் வரலாம். பொதுவாக கவிதை மொழிபெயர்ப்பு என்பது வரி வரியாக, சொல் சொல்லாக அலசி ஆராய்ந்து தான் மொழிபெயர்க்கப்படும். இல்லையென்றால் மூலக்கவிதையின் சில அம்சங்கள் மொழி பெயர்ப்பில் விட்டுப் போயிருக்கும். அதனை விலக்கும் உரிமை மொழிபெயர்ப்பாளருக்குக்

கிடையாது. பொருள் மயக்கம் அல்லது குழப்பம் தரும் பகுதிகளை மட்டும் விலக்கிவிட்டு பின் குறிப்பில் அதனைப் பற்றி, குறிப்பிடலாம். நிகரன் தேர்வில் இயல்பான நிகரன்களை, தெரிவு செய்வதோடு கடமை முடிந்தது என்று இருந்து விடாமல் கவிநயத்துடன் தேர்வு செய்து மொழிபெயர்ப்பில் பயன்படுத்த வேண்டும்.

## சொற்பொருள்

ஒரு சொல்லை, அது பயன்படுத்தப்பட்டுள்ள வரி, சூழல், பண்பாட்டுப் பின்னணி என பல வகையிலும் ஆராய்ந்து அதன் பொருளை உணர வேண்டும். சொல்லுக்கென்று அற மதிப்பும் அழகியல் மதிப்பும் உண்டு. கவிதையை மொழிபெயர்க்கும் போது அதனை, இலக்கு மொழி வாசகர் ரசிக்கும் வகையில் மொழிபெயர்க்க வேண்டும். ஒரு நிகரன் சரியானதாக இருந்தாலும் இலக்கு மொழியில் அது அருவருப்பாகவோ ஆபாசமாகவோ இருக்கக் கூடாது. micro finance என்பதை ‘சிறு நிதிக்கடன்’ என்று மொழிபெயர்த்தவர்கள் micro water irrigation என்பதை ‘சிறுநீர்ப் பாசனம்’ என்று மொழிபெயர்த்தால் அருவெறுப்பாகவும் இருக்கும், பொருளும் மாறுபடும் என்பதால் இந்த ஒரு சொல்லில் மட்டும் ‘நுண்ணீர் பாசனம்’ என்று மொழிபெயர்த்தனர். நுண்ணீர் என்பது பொருந்தாத மொழிபெயர்ப்பு என்றாலும் வேறு வழியில்லாமல் இவ்வாறு மொழிபெயர்த்தனர். இது போன்ற

சூழ்நிலையில் சரியான நிகரன் தெரிவு என்பதைவிட வாசகரின் ஏற்பை அறிந்து முடிவு செய்வதே சாலச் சிறந்ததாகும்.

## சொற்களின் சிறப்புச்சேர்க்கை

சொற்களின் சிறப்புச் சேர்க்கை கவிதைகளில் புதிய பொருளைத் தருகின்றது. அதனை மொழிபெயர்ப்பது மட்டும் கடினமல்ல. விளக்குவதும் கடினம் ஆகும். 'கண்மணிமிடைப் பவளம்' என்ற கவிதையில், ஒரு காதலன் கண்மணி என்று தன் காதலியை அழைத்து, அத்துடன் சேர்த்து அவள் 'மணிமிடைப்பவளம்' போல விளங்குகிறாள் என்பதையும் சொல்கிறான். மணிமிடைப்பவளம் என்பது அகநானூறு என்ற அகத்திணை நூலின் மூன்று பிரிவுகளுள் ஒன்றாகும். அது அகத்தின் ஒரு பிரிவு என்பதையும் இக்காதலன் இங்கு சுட்டுப் பொருளாக உணர்த்துகிறான். என் அகத்தின் ஒரு பிரிவு நீ. கண்ணின் மணி நீ. மணியுடன் மிடைந்த பவளம் நீ என்கிறான். மணி என்பது வெண்முத்தையும் பவளம் என்பது செம்பவளத்தையும் குறிக்கிறது.

'மணிபிரவாள நடை' என்பது ஒருகாலத்தில் மேட்டுக்குடியினர், படித்தவர்கள், தங்களை உயர் சாதியினர் என்று கருதியவர்கள், எழுத்திலும் பேச்சிலும் பயன்படுத்தி வந்த தனித்த மொழிநடை ஆகும். இதில் தமிழும் வடமொழியும் கலந்திருக்கும், அதனை மணியும் பவளமும்

*சேர்த்துக் கட்டிய மொழி நடை என்பர். அது போல இவள் மணியுடன் கூடிய பவளமாகத் திகழ்கிறாள்.*

இடையிடையே வருகிறாய்
இடையிடையே துரிதமாய்
விடைபெறவே வருகிறாய்
இடைவேளை விடுகிறாய்
அகநானூறிருக்க
கண்மணிமிடைப்பவளமென
உன் மௌனத்தை எடுத்தாளும்
என் மனதின் வலி
மௌனமல்ல
இடையில் வந்த கனவுள்
இடைவெளி துளிர்க்கத்
துடித்தெழுந்தேன்
கால நகர்வில்
கவிதை எழுதலாம்
.
.
கணநேர நெருக்கம்
காண்பதெப்போ

*(முத்தமிழ் விரும்பியின் - காதல் மொழி)*

*இந்தக் கவிதையில் கண்மணிமிடைப்பவளம் என்ற சொல் இரண்டு மூன்று சொற்களின், சிறப்புச் சேர்க்கையாக வந்து ஆழமான பொருளைத் தருகிறது. இந்தக் கவிதையில் இச்சொல்லை மட்டும் திறவுச் சொல்லாகக்*

கொண்டு ஆராய்ந்தால் இன்னும் பல பொருளை உய்த்தறிந்து நுகர்ந்தின்புறலாம்.

இக்கவிதையை மொழிபெயர்க்கும் சூழ்நிலையில் பெயர்ச் சொல்லாக விளங்கும் ‘மணிமிடைப்பவளம்’ என்பதை நேரடியாக ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க இயலாது. ஒலிபெயர்க்கத் தான் முடியும். பிறகு இதற்கான விளக்கத்தை பின்குறிப்பில் அளிக்கலாம். ஆனால் மூல மொழி வாசகர் பெற்ற கவியின்பம் பெறுமொழி வாசகருக்குக் கிட்டாது. ஆங்கில மொழிபெயர்ப்புக்கு அணிந்துரை வழங்கிய, அமெரிக்கத் தமிழ் மாணவி ‘ஒவ்வொரு கவிதைக்கும் கீழே சிறு குறிப்பு கொடுங்கள்’ என்று கேட்டதும், இத்தகைய சிக்கலான சொற்பயன்பாடுகளைப் புரிந்துகொள்வதற்கே எனலாம். ஆங்கிலத்தில் இதன் மொழிபெயர்ப்பு ஓரளவுக்கு விளக்கமாகத் தரப்பட்டு பின்னர் அடிக்குறிப்பிலும் விளக்கப்பட்டுள்ளது.

You come in between
You come in between
You come in between
Quickly
To bid good bye
You leave
Intermissions
When there is

An old gold collection of
Classic love poems, Akananaanuuru
And
You darling being a part of it
As Manimidaippavalam
.
.
When to enjoy
A momentary hug.

*(Speaking with You, Tr. By. C. Rajeswari)*

## Notes:

Akananaanuru is a collection of 400 love poems of Sangam Age. It is classified into three parts and one among them is Manimidaippavalam.[121-200] which means a string of gems, pearls and rubies string together

*மொழிபெயர்ப்பாளர் மூல நூலில் இல்லாத அகநானுறு பற்றிய விளக்கத்தை ஆங்கிலத்தில் சேர்த்துள்ளார். 'பண்டைய செவ்வியல் இலக்கியத்தின் காதல் தொகுதிப் பாடல்கள்'* [An old gold collection of Classic love poems, Akananaanuuru] *என்ற வரிகள் கூடுதலானவை. 'கவிதையின் ஓட்டத்திலேயே அதன் பொருளைப் புரிந்து கொள்ள வேண்டும்' என்ற நோக்கத்துடன் இவ்விளக்கம் தரப்பட்டது. ஒவ்வொரு முறையும் வாசகர் பிற்குறிப்பைப் படித்து, அயல் பண்பாட்டையும் மொழியையும் புரிந்துகொண்டு கவிதையை நுகர்வது என்பது,*

காலத் தாழ்வும், கவிதையின் ரசானுபவத்துக்கு தடையும் ஏற்படுத்துவது ஆகும். அதனால் சிக்கலான இச்சொற்றொடரின் பொருளை ஓரளவு உணர்ந்து கொள்ளும் வகையில் கவிதைக்குள் ஒரு விளக்கத்தைக் கொடுத்துவிட்டு, பின்னர் பிற்குறிப்பில் நீண்ட விளக்கத்தை மொழிபெயர்ப்பாளர் அளித்துள்ளார்.

When there is
An old gold collection of
Classic love poems, Akananaanuuru
And
You darling being a part of it
As Manimidaippavalam

*(Speaking with You, Tr. By. C. Rajeswari)*

என்ற வரிகள் அழகான பழமையான காதல் கவிதை தொகுதியான அகநானுறு இருக்க 'என் கண்மணி நீயதன் ஒரு பிரிவான மணிமிடைப் பவளம் ஆனாய்' என்று பொருள் தரும்போது 'என் காதல் வாழ்வின் இணைபிரியாத பகுதி நீ என்று காதலன் வருணிக்கும் அந்தக் காதலியின் சிறப்பை ஆங்கில வாசகரால் புரிந்துகொள்ள முடியும்.

**பண்பாட்டுத் தகவல்**

கவிதை மொழிபெயர்ப்பில் பண்பாடு சார்ந்த தகவல்களை மொழிபெயர்ப்பது என்பது ஒரு

*பெரிய சவாலாகும்.*

தோழியும் இல்லை
தேர்ப்பாகனும் அப்படியே
தோழனுமில்லை
பாங்கனும்
ம்ஹூம்
என் அழைப்புகளை
நிராகரிக்கும்
இவளை எப்படித்தான் .......

*[முத்தமிழ் விரும்பியின் 'உன்னோடு உரையாடுதல்']*

*என்ற கவிதையில் காதலிக்கு தூது அனுப்ப ஒருவரும் இல்லை அவள் அலைபேசியில் அழைத்தாலும் பேசுவதில்லை என்று கவலைப்படும் காதலனின் ஏக்கம் பாடுபொருளாகின்றது. இதை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் போது சங்க இலக்கிய அகத்திணைக் கதாபாத்திரங்களான தோழி, பாங்கன், தேர்ப்பாகன் ஆகியவர்களின் பங்கு பற்றி தெரிவிக்காவிட்டால் இலக்கு மொழி வாசகருக்கு ஒன்றுமே புரியாது. தோழியும், தோழனும் புரியலாம். ஆனால் தேர்ப்பாகன் இங்கு எதற்கு வருகிறான்? அவன் என்ன செய்வான்? பாங்கன் என்பவன் யார்? என்ற வினாக்கள் எழும். தோழனை* friend *எனலாம் பாங்கனை என்னென்று மொழிபெயர்ப்பது?*

How am I to ....
No female friend
No chariot driver
No male friend
No intimate dude
Nothing
With her who rejects
My calls,
Then
How am I to ...

*(Speaking with You, Tr. By. C. Rajeswari)*

**Notes:**

In the classical Tamil literature of the Sangam period, the love poems show that the lady love and her lover are supported by their female friend and male friend respectively. In those days, the lover before his marriage would go to faraway places to earn money and come back after some years. While returning, the lover urges the chariot driver to go fast so that he could go and meet his lady love. At that time he shares his feelings with his chariot driver.

*இக்கவிதை மொழிபெயர்ப்பில் அடிக்குறிப்பு கவிதையை விட நீளமாக உள்ளது. ஆனால் இந்த விளக்கம் தரப்படாவிட்டால் தேர்ப்பாகனின் பங்கு புரியாது. இத்தொகுதியில் இன்னும் பல கவிதைகள் இவ்வாறான கதாபாத்திரங்களோடு*

இருப்பதால், முதல் வருகையின் போது அதற்கு விளக்கம் கொடுத்து விட்டால் அடுத்து வரும் கவிதைகளில் விளக்கம் தரத் தேவையில்லை. தோழனுக்கு male friend என்ற நிகரனைக் கொடுத்துவிட்டு, பாங்கனுக்கு intimate dude என்ற நிகரான் கொடுத்திருப்பது குறிப்பிடத்தக்கது. தோழன் என்பவன் பொதுவானவன். பாங்கன் என்பவன் தலைவனின் காதலுக்கு உதவும் அணுக்கத் தோழன். எனவே intimate dude என்பது நிகரனாகத் தரப்பட்டுள்ளது. இலக்கியம், பண்பாடு போன்றவை இரு மொழிக்கும் பொதுவாக இல்லாதபோது இவ்வாறு அடிக்குறிப்பிட்டு விளக்கலாம்.

## பெயர் மொழிபெயர்ப்பு

பண்பாடு சார்ந்த இன்னொரு சிக்கல் கதாபாத்திரத்தின் பெயர்கள் ஆகும். அடிக்குறிப்பில், இப்பெயர்களை விளக்கியும், கவிதையில் அப்பெயருக்கான பங்கு என்ன என்பதையும் குறிப்பிட வேண்டும். ‘அப்போலோவும் டயானாவும்’ என்ற கவிதையை இலத்தீன் மொழியில் ‘ஹோரஸ்’ இயற்றினார். அதனை ஆங்கிலத்தில் ‘ப்ரான்வேல் பிராண்ட்கன்’ என்பவர் மொழிபெயர்த்தார். அதன் பிறகு அக்கவிதை மற்ற மொழிகளில் மொழிபெயர்ப்பாயிற்று.

அப்போல்லோவும் டயானாவும்
கன்னிப்பெண்களே
வேடர் கன்னியைப் பாடுங்கள்
காளைகளே
கட்டிளம் ஃபிபசைப் [அப்போலோ] பாடுங்கள்
இருவரையும் பெற்றுத்தந்த
லடோனாவைப் பாடுங்கள்

*('அவன் கடவுளுக்கு நிகரானவன்'*
*மொ.பெ. செ. இராஜேஸ்வரி)*

*என்று நீளும் இக்கவிதையில் வேடர் கன்னி என்பது 'டயனா'வைக்குறிக்கிறது. 'அப்போல்லோ' என்ற பெயர் கவிதையில் 'அப்போலோ' என்ற பெயரில் வரவில்லை. 'ஃபிபிப்ஸ்' என்று வந்துள்ளது. இங்கு இந்த 'ஃபிபிப்ஸ்' தான் அப்போலோ என்பதை வாசகருக்கு உணர்த்த வேண்டும். இதற்கு தனியாக ஓர் அடிக்குறிப்பு இடாமல் இந்த வரியிலேயே 'ஃபிபசை' என்பதை அடுத்து ஓர் அடைப்புக் குறிக்குள் 'அப்போலோ' என்று குறிப்பிட்டதால் வாசகர் இனி அப்போலோவை, தேட மாட்டார்கள்.*

கன்னிப் பெண்களே
டயானாவைப் பாடுங்கள்
காளைகளே
அப்போலோவைப் பாடுங்கள்

*('அவன் கடவுளுக்கு நிகரானவன்'*
*மொ.பெ. செ. இராஜேஸ்வரி)*

என்று கூட மொழிபெயர்ப்பாளர் சுதந்திரம் எடுத்துக்கொண்டு நேரடியாக, குறிப்பிட்டிருக்கலாம். அவ்வாறு சொல்வது மொழிபெயர்ப்பில் குற்றம் ஆகும். மேலும் அது கவிதையாகாது. அப்படி சொல்ல, தெரியாமலா 'ஹோரஸ்' இருவருக்கும் வேறு அடைமொழி அல்லது பெயர் கொடுத்திருக்கிறார். எனவே மூலக்கவிதையில் என்ன உள்ளதோ அதை மாற்றாமல் மொழிபெயர்ப்பதே மொழிபெயர்ப்பாளரின் தலையாயக் கடமை ஆகும். சில பெயர்களுக்கு பின் குறிப்பில் அவர் யார், அவர் செய்த முக்கிய செயல்கள் என்ன என்று விளக்கி பின்குறிப்பு தரலாம்.

சொல், பண்பாடு ஆகியவற்றுக்கு அடுத்தபடியாக மறு படைப்பு என்ற சவால் கவிதை மொழிபெயர்ப்பில் உண்டு. இம்முன்றும் அனைத்து மொழிபெயர்ப்பிலும் உண்டென்றாலும் கவிதை மொழிபெயர்ப்பில் அதிகம் அல்லது தீவிரமாக இருக்கும் என்று கொள்ளலாம்.

Give us our daily bread என்ற இறை வேண்டுதலை கிறித்துவ வேதாகமத்தில் 'அன்றன்றைக்குள்ள அப்பத்தை எங்களுக்குத் தாரும்' என்று மொழிபெயர்த்தனர். ஐரோப்பாவில் bread என்பது ரொட்டியாகவே புரிந்துகொள்ளப்படுகிறது. ஆனால் இயேசு கிறிஸ்து பிறந்து வளர்ந்த பகுதியில் இது அப்பம்

ஆகும். அப்பம் என்பதற்குரிய சொல்லையே ஆங்கிலத்தில் bread என்றும் female friend என்றும் மொழிபெயர்த்தனர். ஆங்கிலத்தில் இருந்து தமிழுக்கு மொழிபெயர்க்கும் போது ரொட்டி என்று மொழிபெயர்த்திருக்க வேண்டும் ஆனால் அப்பம் என்றனர். இங்கு ரொட்டி, அப்பம் இரண்டுமே சரியான மொழிபெயர்ப்பு தான் என்றாலும் சொற்பொருள் அளவில் அந்நிகரன் சரி. மொழிபெயர்ப்பு சரிதானே என்று இந்தளவில் நின்றுவிடக் கூடாது ஏனென்றால் தமிழ்ப் பண்பாட்டில் தமிழர் வாழ்வியலில் அப்பமோ ரொட்டியோ தினசரி உணவு கிடையாது. அன்றாட உணவு இங்கு அரிசிச் சோறு என்பதால் இதுவே சரியான மொழிபெயர்ப்பாக அமையும்.

சொல், பண்பாடு என்ற இரண்டிலும் சரி என்றாலும் வெறும் சோறை முழு உணவு என்று கருதுவது கிடையாது. இத்தருணத்தில் இங்கு மறு கட்டமைப்பு தேவைப்படுகிறது. ரொட்டி, அப்பம் என்பன அயல் பண்பாட்டு சொல்லாக்கங்கள். ‘சோறு’ என்பதும் முழுமையான நிறைவான நிகரன் இல்லை. அடுத்த கட்டமாக நிறைவான அல்லது நெருங்கிய இயல்பான நிகரனைத் தேடும்போது உணவு என்பது சரியானதாகத் தோன்றுகிறது.

அன்றன்றைக்குள்ள உணவை எங்களுக்குத்
தாருங்கள்

என்பது சரியான இயல்பான மொழிபெயர்ப்பாகும். மறு கட்டமைப்புக்கு இது ஓர் எளிமையான சான்றாகும்.

## விடுநிலைப்பாவே சிறந்தது

கவிதை மொழிபெயர்ப்பு குறித்துத் தொடக்க காலத்தில் கவிதையைக் கவிதையாக மொழிபெயர்க்க வேண்டுமா, உரைநடையாக மொழிபெயர்க்கக் கூடாதா? என்ற வினா எழுந்தபோது அறிஞர்கள் இரு பிரிவினராக நின்றனர். கவிதையை மொழிபெயர்க்கக் கூடாது. அது வன்கொடுமை என்று ஆரம்பத்தில் கருதினர். கவிதை என்பது நடனம் போன்றது உரைநடை என்பது நடப்பதை ஒத்தது. நடனம் என்பது என்றோ ஒரு நாள் பார்த்து ரசிப்பது, நடை என்பது அன்றாடத் தேவை ஆகும். எனவே கவிதையை உரைநடையாக மொழிபெயர்க்கக் கூடாது என்பர். பின்னர்கவிதையாகமொழிபெயர்க்கலாம் என்றனர். அதிலும் மரபுக் கவிதையாகத் தான் மொழிபெயர்க்க வேண்டும் என்றனர். ஐரோப்பாவில் கிரேக்கக் காவியங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த போது இவ்விவாதங்கள் தோன்றின. ஒரு வழியாக தற்போது ‘விடுநிலைப்பா’ வடிவில் மொழிபெயர்ப்பது சிறப்பாக இருக்கும் என்ற முடிவுக்கு மூல நூலாசிரியர்கள், மொழி பெயர்ப்பாளர்கள் மற்றும் வாசகர்கள் ஆகியோர் வந்துள்ளனர்.

*தமிழில் சங்க இலக்கியத்தின் சில பாடல்களை விடுநிலைப்பா வடிவில் மொழிபெயர்த்த ஏ.கே.இராமானுஜன் அவர்களின்* Poems of Love and War *ஐ, படிக்கும் போது சரியென்றே தோன்றுகிறது.*

சான்று
நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரல்
கருங்கோல் குறிஞ்சி பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனோடு நட்பே
*(குறுந்தொகை – 3)*

*என்ற குறுந்தொகைப் பாடலை எளிமையாக அழகாக ஏ.கே.இராமானுஜன் அவர்கள் மொழிபெயர்த்த போது அதனை ஆங்கிலத்தில் படித்த வெளிநாட்டாரும் உள்நாட்டில் சங்க இலக்கிய அறிமுகம் இல்லாதோரும் ரசித்து மகிழ்ந்தனர். தமிழ் வாசகர்களும் மூலச்செய்யுளைப் படித்துப் பொருள் தெரிந்து கொள்வதை விட எளிய ஆங்கிலத்தில் இருந்த இம்மொழிபெயர்ப்பைப் படித்து பொருள் தெரிந்து இன்புற்றனர்.*

Bigger than the earth, certainly
Higher than the sky
More unfathomable than the waters
Is this love for this man

Of the mountain slopes
Where bees make rich honey
From the flower of kurinji
That has such black stalks

இங்குமூலநூல்படைப்பைவிடமொழிபெயர்ப்பு அது தோன்றிய காலத்தின் காரணமாக, பலரையும் சென்று சேர்கிறது. தற்கால மொழிநடையில் இருந்தால் தமிழில் வாசிப்பது கடினமாக இருக்காது. ஆனால் சங்ககால மொழிநடை கடினமானது என்பதாலும் அதற்கு பொழிப்புரை தெளிவுரை தேவைப்படுவதாலும் அதனைப் படிப்பதைவிட ஆங்கில மொழிபெயர்ப்பைப் படிப்பது எளிதாகவும் பொருள் விளங்கிக் கொள்ள ஏதுவாகவும் இருக்கிறது. எனவே இங்கு மூலத்தைப் படிப்பதைக் காட்டிலும் மொழிபெயர்ப்பு, மூலமொழி மற்றும் இலக்கு மொழி வாசகரிடம் பெரும் செல்வாக்குப் பெறுகிறது. இளைஞர்களை, பண்டையச் சங்க இலக்கியங்களைப் படிக்க வைக்க இவ்வாறு ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வழங்கலாம். அவர்கள் ஒருமுறை ஆங்கிலத்தில் படித்து மகிழ்ந்தால் பின்னர் தமிழ் மூலத்தை, தேடி வருவார்கள். இதனை மொழிபெயர்ப்பின் மிகப்பெரிய வெற்றியாகவும் பயனாகவும் கருதலாம்.

கவிதை மொழிபெயர்ப்பில் பொருளை விட அணிநயங்களே கடினமானவை. உவமை உருவகங்களை மொழிபெயர்ப்பதில் மொழிபெயர்ப்பாளர் பண்பாட்டுச் சிக்கலைச் சந்திக்கிறார். ஆங்கிலத்தில் ஆந்தை என்பது ஞானத்தின் அடையாளம். ஆனால் கீழை நாடான பாரசீகத்தில் அது துரதிர்ஷ்டத்தின் சின்னம். காளை ஆங்கிலத்தில் பொறுமையின் அடையாளம் பாரசிகத்தில் முரட்டுத்தனத்தின் குறியீடு. மேலைநாட்டுக்கும் கீழைநாட்டுக்கும் கலாச்சார வேறுபாடுகள் இருப்பதைப் பூச்சி, பறவை, விலங்குகள் உருவகங்களாகப் பயன்படும் விதத்தினால் அறியமுடியும். இந்த வேறுபாடுகளைப் புரிந்து கொண்டு கவிதைகளை அல்லது கலைப்படைப்புகளை மொழிபெயர்க்க வேண்டும். மூலத்தில் இருப்பதை அப்படியே மொழிபெயர்த்தால் இலக்கு மொழி வாசகருக்குத் தவறான பொருளை உணர்த்திவிடும்.

## உள்ளடக்கத் தெரிவு

கவிதை மொழிபெயர்ப்புக்கு உள்ளடக்கத்தைத் தெரிவு செய்யும் போது இரண்டு வகையில் தெரிவு செய்யலாம். 1. பழைய தகவல் அல்லது தெரிந்த கருத்து 2. புதிய தகவல் அல்லது தெரியாத கருத்து. இவ்விரண்டையும் தெரிவு செய்யத் தனித்தனி காரணம் உண்டு.

*கவிதையின் உள்ளடக்கம் இலக்கு மொழி வாசகருக்குத் தெரிந்ததாக இருந்தால் அதாவது பழைய கருத்து என்றால் இரண்டு வேறுபட்ட மொழிகளிலும் இரண்டு நாடுகளிலும் மக்களிடையேயும் ஒரே கருத்து நிலவுகிறதே என்ற வியப்பில் வாசிக்கத் தொடங்குவர். கவிதையின் உள்ளடக்கம் முற்றிலும் வேறுபட்ட நம்பிக்கை அல்லது புதிய கருத்து என்றால் அந்த நாட்டில் மொழியில் இப்படி ஒரு வேறுபாடா? என்ற வியப்புடன் அதன் காரணம் என்னவென்று அறிய ஆர்வம் கொள்வர். அதனாலும் அம்மொழிபெயர்ப்பை வாசிக்க விரும்புவர். இவ்வாறு இரண்டு வகையான படைப்புகளைத் தெரிவு செய்து மொழிபெயர்க்கலாம்.*

## தெரிந்த தகவலைத் தெரிவு செய்தல்

*காதலி தன் காதலனை யாரும் அறியாமல் சந்திக்கும் நிகழ்வு உலகெங்கும் நடந்துள்ளதைப் பல கவிஞர்களும் கவிதையாக இயற்றியுள்ளனர். தமிழ் சங்கப்பாடலில் ஒரு காதலன் இவ்வாறு தனிமையில் சந்தித்து அவளை நுகர்ந்த பின்பு இவளை அறியேன் என்று சொல்லிவிடுகிறான். அவள் தனக்கு சாட்சி சொல்ல யாருமில்லையே அங்கு ஒரு குருகு மட்டும் தானே நின்றது. அதுவும் ஓடு தண்ணீரில் சிறிய ஆரல் மீனை தனது உணவுக்காக எதிர்நோக்கியபடி நின்றது. எங்களைத் திரும்பியும் பார்க்கவில்லையே. நான்*

*என்ன செய்வேன் என்று கலங்குகிறாள்.*

யாரு மில்லை தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
திணைத் தாளன்ன சிறு பசுங்கால்
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகுமுண்டு தான் மணந்த ஞான்றே.

*[குறுந்தொகை 25]*

*இது போன்ற ஒரு கருத்துடைய பாடல் ஆங்கிலத்தில் இருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.*

எலுமிச்சை மரத்தடியில்
டெய்சி மலர்த் தரையில்
எனக்குத் தெரிந்த இருவர்
படுக்கையமைத்தனர்

*('செக்கச்சிவந்த ரோஜா' மொ.பெ. செ. இராஜேஸ்வரி)*

*எனத் தொடங்கும் இக்கவிதையின் கடைசி வரிகள் 'சிட்டு யாரிடமும் சொல்லாது' என்ற நம்பிக்கையில் அவள், தனது ரகசியம் காப்பாற்றப்படும் என்று நம்புவதாக நிறைவு பெறுகிறது. இரண்டு கவிதையிலும் காட்சி ஒன்று [இடப்பின்புலம் கதை மாந்தர்கள் [குருவி உட்பட] செயல்பாடும் ஒன்று; காலம் வெவ்வேறு விளைவும் வெவ்வேறு. ஆங்கிலக் கவிதையைத் தமிழ் வாசகர் ஒருவர் வாசிக்கும் போது குறுந்தொகைத் தலைவி அவர் கண் முன் வருவதைத் தவிர்க்க இயலாது. கவிதையின் முடிவு வரிகள் வருமாறு :*

எனக்கு எவ்வளவு வருத்தமும் அவமானமும்
நாங்கள் அந்தப் பசும் புல்வெளியில்
என்ன செய்துகொண்டிருந்தோம்
எவரும் அறியார்
எனக்கும் என் காதலனுக்கும்
அந்த இரவுச் சிட்டுக்கும் தவிர
சிட்டு யாரிடமும் போய்ச்
சொல்லாதென்று நினைக்கிறேன்.

*('செக்கச்சிவந்த ரோஜா' மொ.பெ. செ. இராஜேஸ்வரி)*

*கவிதை அவளது அச்ச உணர்வுடன் நிறைவு பெறுகிறது. இரு பெண்களும் நடந்ததை நினைத்து பார்ப்பதாக உள்ளடக்கம் அமைந்ததால் இக்கவிதை மொழிபெயர்ப்புக்குத் தெரிவு செய்யப்பட்டுள்ளது.*

## புதிய தகவலைத் தெரிவு செய்தல்

*கவிதைக்கான உள்ளடக்கத்தைத் தெரிவு செய்வதில் முற்றிலும் வேறான புதிய கருத்து அல்லது நம்பிக்கை, பற்றிய கவிதைகளும் இடம்பெறுகின்றன.*

### சான்றாக

*வெட்டுக்கிளி ஐரோப்பாவில் வசந்தத்தின் வருகையை அறிவிக்கும் இனிய தூதன். ஆனால் கீழை நாடுகளில் அது துளிர்களைக் கத்திரித்துச் செடி, கொடி பயிர்களின் வளர்ச்சியைத் தடுக்கும் தீய பிராணி. கிறித்துவத் திருமறையில் பத்து*

*வாதைகளில் ஒன்றாக வெட்டுக்கிளி சொல்லப்பட்டுள்ளது. இது பற்றிய ஒரு மொழிபெயர்ப்பு இலக்கு மொழி வாசகருக்கு பண்பாட்டு அயன்மையைத் தோற்றுவிக்கும்.*

*தாமஸ் ஸ்டான்லி என்பவர் வெட்டுக்கிளி பற்றி எழுதிய கவிதையில்*

அதிகாலைப் பனித்துளி அருந்தி
மும்மடங்கு மகிழ்ச்சியில் திளைத்து
நாள் முழுக்க 'சிக் சிக்' என ஒலி எழுப்பி
ஏதேனும் ஓர் இலை தழை மீது அமர்ந்தபடி
ஒரு ராணியைப் போல
சிறகுகளை நிமிர்த்தும் உன்னை
உழவன் மகிழ்ச்சியோடு அழைப்பான்
காரணம்
நீ எதையும் அழிக்க மாட்டாய்
உன்னை அனைவரும் மதிக்கின்றனர்
வசந்தத்தின் தீர்க்கதரிசனம் நீ
தேவதைகள் உன் அழகில் மயங்குவர்
அப்போலோவும் உன்னைக் கண்டு

அதிசயிப்பார்'',

*(சென்றிடுவீர் எட்டுத்திக்கும், மொ.பெ. செ. இராஜேஸ்வரி)*

*என்று வெட்டுக்கிளியை, பாராட்டி வருணித்து மகிழ்கிறார். அடுத்து ஆபிரஹாம் கோவ்லி என்ற கவிஞரும் வெட்டுக்கிளி பற்றி எழுதிய கவிதையில் அதனை*

மகிழ்ச்சியான பூச்சி
உன் மகிழ்ச்சியை யாரோடு எதனோடு
ஒப்பிட முடியும்?

இறைவனால் உணவூட்டப்பட்டு
அதிகாலைப் பனித்துளியை மெதுவாக ருசித்து
ஆஹா
இயற்கை உனக்காகக் காத்திருந்து
நீ எங்கே திரிந்தாலும்
தன் பசுமையால்
உன் கோப்பையை நிரப்புகிறது
அதன் ஓரினக் காதலன் நீ
நீ குடித்து ஆடிப் பாடுகிறாய்
உல்லாசமான மன்னவனை விட
மகிழ்ச்சி நிரம்பியவன் நீ

*(சென்றிடுவீர் எட்டுத்திக்கும், மொ.பெ. செ. இராஜேஸ்வரி)*

*என்று புகழ்கிறார்.*

## கவிதை இரசனையும் மொழிபெயர்ப்பும்

*ஒரு கவிதையை மொழிபெயர்க்கும் முன்பு மொழிபெயர்ப்பாளர் ஒரு வாசகராக அக்கவிதையைப் படித்தின்புறுகிறார். இதனை வடமொழியில் ரசபாவம் என்பர். இவ்வாறு ரசமாக இயற்றப்பட்ட காவியத்தை 'ரசகாவியம்' என்பர். கவிதையை வாசிக்கும் போது ஏற்படும் உணர்ச்சிப் பிரவாகத்தை வியபிசார பாவம் என்பர்.*

கவிதானுபவத்தில் மூழ்கித் திளைத்து இரசித்துமகிழ்ந்துஅதனைஅவர்மற்றவர்களோடு பகிர்ந்து கொள்ள விரும்புகிறார். எடுத்த எடுப்பில் எவரும் கவிதையை மொழிபெயர்க்க முனைவது கிடையாது. மெல்ல மெல்ல அக்கவிதை அவருள் ஏற்படுத்தும் இரசாயன மாற்றம் அவர் அறிந்த பிற மொழி வாசகர்களில், யாருடன் பகிர்ந்து கொண்டால் அவர்கள் இரசித்து வாசிப்பார்கள், எந்த மொழியில் இப்பணியைச் செம்மையாகச் செய்ய முடியும் என்பதை கவிதைகளைப் படித்து ஆய்ந்து அவற்றில் தோய்ந்து முடிவு செய்கிறார். தான் இரசிக்கும் கவிதைகளை மட்டுமே ஒருவரால் மொழிபெயர்க்க முடியும். மற்ற கலைப்படைப்புக்கும் இது பொருந்தும். இலக்கியம் அல்லாத மற்ற மொழிபெயர்ப்புக்கு, துறை சார்ந்த அறிவும், மொழியறிவும் இருந்தால், ஆர்வம் மற்றும் பயன் காரணமாகச் சிறப்பாக மொழிபெயர்க்கலாம். ஆனால் கவிதை மொழி பெயர்ப்புக்கு மொழியறிவு கவித்திறனும் மட்டும் போதாது. இரசனை முக்கியம். இரசனை இருந்தால் மட்டுமே கவிதையின் ஆத்மாவைக் கண்டறிய முடியும். அதன் பிறகு மொழி பெயர்த்தால் மொழிபெயர்ப்பு உயிர்ப்புடையதாக விளங்கும். இல்லையென்றால் சொல்லும், பொருளும், சரியாக இருந்தாலும் வாசகரைக் கவராது அவர் நெஞ்சங்களைத் தொடாது.

கவிதை எந்த மொழியில் இருந்தாலும், மொழிபெயர்ப்பாக இருந்தாலும், மூலமொழிப் படைப்பாக இருந்தாலும், வாசகரைத் திரும்ப திரும்ப வாசிக்க வைக்க வேண்டும். வாசகருக்கு அக்கவிதை ஒரு கலைப்படைப்பு மட்டுமே. அவர் இது கடின முயற்சியில் மேற்கொண்ட மொழிபெயர்ப்பு என்று உணர்வதில்லை. அது தேவையுமில்லை. அவர் தன் கையில் இருக்கும் கவிதையை வாசித்து அதில் மனதைக் பறிகொடுக்கிறார். அடுத்த கவிதைக்குப் போக இயலாமல் அதே கவிதையில் நின்று நிதானித்து, திரும்பவும் வாசித்து சுவைத்தார் என்றால் அக்கவிதை சிறந்த கவிதைகளில் ஒன்றாகிறது. இவ்வளவே வாசகரின் செயற்பாடு. இதுவே கவிதை மொழிபெயர்ப்பின் வெற்றியும் பயனும் ஆகும்.

மொழிபெயர்ப்பாளர் ஒரு தொகுதியில் உள்ள அனைத்து கவிதைகளிலும் மனதைப் பறிகொடுத்தாலும், அனைத்தையும் மொழி பெயர்த்தாலும், அதனைப் படிக்கும் வாசகர் அத்தனை கவிதைகளையும் அழகானவை என்று கருதலாம், கருதாமலும் போகலாம். அவரவர் வாழ்க்கைப் பின்னணிக்கும், அனுபவத்துக்கும், ரசனைக்கும், ஏற்ப சில கவிதைகள் மட்டுமே சிலருடைய மனதைக் கவரும். அனைத்துக் கவிதைகளும் வாசகரின் உள்ளத்தைக் கொள்ளை

கொள்ளும் என்று கருத இயலாது. ஒருவருக்குப் பிடித்த கவிதை அடுத்தவருக்கு, சாதாரணமாகத் தோன்றலாம். இவருக்கு, சாதரணமாகத் தோன்றிய கவிதையை இன்னொருவர் வானளாவப் புகழலாம். ஆனால் மொழி பெயர்ப்பாளரோ ஒரு தொகுதியில் உள்ள அனைத்து கவிதைகளையும் தான் பெற்ற பிள்ளைகள் போல நேசத்துடன் பாசத்துடன் பார்த்து வாசித்து மகிழ்வார். ரவீந்திர நாத் தாகூர், மகாகவி பாரதியார் போன்ற கவிஞர்கள் தங்கள் கவிதைகளை, தாங்களே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தனர்.

## மூல மொழிக் கவிஞரே மொழிபெயர்ப்பாளர்

பாரதியார் நல்ல கலாரசிகர். அவர் நாச்சியார் திருமொழியையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். தன்னுடைய கவிதைகளையும் ரசித்து மகிழ்ந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். இவர் கவிஞர் மட்டுமல்ல, நல்ல ரசிகரும் சிறந்த மொழிபெயர்ப்பாளரும் ஆவார். நம்மாழ்வார் திருவாய் மொழி, நாச்சியார் திருமொழி அருணகிரிநாதரின் திருப்புகழ் ஆகியவற்றை அவர் மொழிபெயர்த்தார். அத்துடன் தனது கவிதைகளையும் உரைநடை வடிவிலும், மரபுக் கவிதையாகவும் மொழிபெயர்த்தார். உள்ளடக்கத்திற்கு ஏற்ற வகையில் இந்த வடிவத்தை முடிவு செய்தாரா அல்லது மொழிபெயர்க்கும் வேளையில் அவருக்கு

தோன்றிய வடிவில் செய்தாரா என்பது தெரியவில்லை. அவரால் அருமையாக மரபுக்கவிதை வடிவில் இயைபுச் சுவையுடன் மொழிபெயர்க்க முடிந்தது. ஆனாலும் சில கவிதைகளை உரைநடையில் மொழிபெயர்த்ததன் காரணம் தெரியவில்லை.

மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் தம்பி மதுசூதனன் வந்தென்னைத்
கைத்தலம் பற்ற கனா கண்டேன் தோழி நான்

நாச்சியார் திருமொழியில் வரும் இப்பாடலை உரைநடையில் பின்வருமாறு மொழிபெயர்த்துள்ளார்.

**I dreamed a dream, O friend**

There were beatings of the drums and blowings of the conch; and under the canopy hung heavily the strings of pearls He came, my lover and my Lord, the vanquisher of demon Madhu, and grasped me by the hand.

பெண்கள் விடுதலைக் கும்மியை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் போது கும்மி பற்றிய விளக்கத்தை முதலில் கொடுத்துள்ளார். [The KUMMI dance is perhaps peculiar to Southern India and is danced by women in a circle. The song that accompanies this picturesque dance is also called 'KUMMI' [C.S.B].

C.Subramaniya Bharathi என்ற தனது பெயரின் முதல் எழுத்துக்களையும் அடைப்புக்குறிக்குள்

*தந்துள்ளார். கவிதை நடையில், அழகான ஆங்கிலத்தில் நல்ல சிறப்பான சொற்களைத் தெரிவு செய்து மொழிபெயர்த்திருப்பதை, காணலாம்.*

ஏட்டையும் பெண்கள் தொடுவது
தீமை என்று
எண்ணி இருந்தவர் மாய்ந்துவிட்டார்
வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி

வைப்போமென்ற
விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார்

Gone are they who said to women; ‘Thou shall not open the Book of Knowledge’.
And the strange ones who boasted saying
‘We will immure these women in our homes-’
To-day they hang down their heads

*ஏடு என்பதை புத்தகம் என்று பொருள் கொள்ள வாய்ப்பிருந்தும் பாரதியார் அதனை* Book of Knowledge; *என்று மொழிபெயர்த்தது அவருக்குரிய சுதந்திரத்தைக் காண்பிக்கிறது. அவரே மூல மொழியில் படைப்பாசிரியர் என்பதால் அவரால் மாற்றியும் மொழிபெயர்க்க முடியும். ‘கண்ணம்மா என் காதலி’ என்ற தலைப்பில் உள்ள இன்னொரு இனிமையான கவிதையின் மொழிபெயர்ப்பை அடுத்துக்*

*காட்டலாம். இக்கவிதை மூலமொழிக் கவிதையின் சந்த நயத்தில் ஆங்கிலத்தில் அழகான மரபுக் கவிதையாக ஈற்றசை ஒன்றி வர புனைவு இலக்கிய பாணியில் (Romantic Literature) மொழி பெயர்க்கப்பட்டது. தமிழில் கண்ணனை கண்ணம்மா என்று பெண்ணாக விளித்து காதலியாகக் கருதி கவிதை பாடிய பாரதியார் ஆங்கிலத்தில் கண்ணம்மா என்று விளிக்காமல்* O Krishna, Love *என்று விளித்திருக்கிறார். இது போன்ற மாற்றங்களை வேறொரு மொழி பெயர்ப்பாளர் செய்ய இயலாது. செய்தால் அது குற்றமாகக் கருதப்படும்.*

பாயுமொளி நீயெனக்கு!
பார்க்கும் விழி நானுனக்கு
தோயுமது நீ எனக்கு
தும்பியடி நானுனக்கு
வாயுரைக்க வருகுதில்லை
வாழி நின்றன் மேன்மையெல்லாம்
தூய சுடர் வானொளியே!
சூறையமுதே! கண்ணம்மா!

Thou to me the flowing light
And to thee discerning Sight
Honied blossom thou to me
Bee enchanted I to thee
O heavenly Lamp with Shining ray

O Krishna, Love. O nectar spray
With falt'ring tongue and words that pant
Thy glories here I strive to chant.

வரிகளையும் மாற்றியமைத்து இலக்கு மொழியின் வாக்கிய அமைப்புக்கேற்ப பாரதியார் சுதந்திர உணர்வுடன் மொழிபெயர்த்துள்ளார்.

## கவிதை மொழிபெயர்ப்பும் மொழியாக்கமும்

கவிதை மொழிபெயர்ப்பு குறித்து ஜேம்ஸ் ஹோல்ம்ஸ் பல நிலைகளில் அம்மொழிபெயர்ப்பு செய்யப்படுவதாக விளக்கியுள்ளார். அவ்வாறு ஒவ்வொரு படிநிலையிலும் அச்செயல்முறை வெவ்வேறு வடிவம் பெறுவதை அறியலாம். ஒரு கவிதையை வாசிக்கும் வாசகர், மொழிபெயர்ப்புத் திறன் உடையவராக இருந்தால் முதலில் கவிதையை வாசிப்பார். பிறகு அது குறித்து வந்திருக்கும் திறனாய்வுக் கட்டுரைகளை வாசிப்பார். பின்பு மற்ற மொழிகளில், மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறதா அல்லது திறனாய்வு கட்டுரைகள் வந்திருக்கிறதா என்று அறிந்துகொள்வார். அதன் பிறகு உரைநடையாக கவிதையின் பொருளைச் சொல்லிப் பார்ப்பார் அல்லது எழுதிப் பார்ப்பார். இம்மூன்று செயல்முறைகளையும் அவர் கருத்துவிளக்கம் அல்லது interpretation என்கிறார். அடுத்த மூன்று செயல்முறைகளை அவர் கவிதையாக்கம் [poetry]

என்கிறார். உரைநடை வடிவில் கருத்துகள் செம்மையாக இருந்தால் மொழிநடை அழகாக இருந்தால் மொழிபெயர்ப்பாளர் கவிதையாக மொழிபெயர்ப்பார். சொல்லுக்கு சொல் வரிக்கு வரி மாற்றாமல் மொழிபெயர்ப்பார். இது மொழிபெயர்ப்பு. இந்நிலையை ஜேம்ஸ் ஹோல்ம்ஸ் கவிதை மொழிபெயர்ப்பின் அச்சாணி என்கிறார்.

இலக்குமொழியில்கவிதை வாசிப்புக்கேற்ற வகையில் அழகுற வரவேண்டுமெனில் வெறுமனே மொழிபெயர்த்தால் மட்டும் போதாது. சொல்லுக்கு சொல் மொழிபெயர்த்த [literal translation] பிறகு மொழிபெயர்ப்பாளருக்குப் பல முக்கியப் பணிகள் காத்திருக்கின்றன, ஒரு கவிதையை அச்சு அசலாக அவர் மொழிபெயர்த்ததும் வாசித்துப் பார்த்து, இலக்கு மொழிக்குப் பொருந்தாதவற்றை நீக்கிவிடுவார். இலக்கு மொழி வாசகருக்குப் பிடிக்காதவற்றையும் அவர்கள் வெறுக்கக் கூடிய பகுதிகள் ஏதேனும் இருந்தால் அதனையும் நீக்கிவிடுவார். இது மொழியாக்கம் ஆகும். சிலர் இத்துடன் நிறுத்திவிடுவர். வேறு சிலர் இன்னும் ஒரு முறை வாசித்துச் செப்பனிட்டுக் கவிதையாக்க முயற்சியில் ஈடுபடுவார். இப்போது வரிகள் மற்றும் சொற்கள் இடம் மாறும். அடுத்து வாசித்துப்பார்க்கும் போது அது

மூலமொழிக் கவிதை போலன்றி இலக்கு மொழியில் எழுதப்பட்ட புதிய கவிதை போலத் தோன்றும். இது தழுவல் [adaptation] அல்லது புத்தாக்கம் [new creation]. தழுவல் என்பது மூல நூல் கருப்பொருளை விட்டு வெளியேறுவததாகும். சில வேளைகளில் மூல மொழிக் கவிதைக்கும், இதற்கும் முரண்பாடான கருத்துகள் கூட வந்துவிடும் ஆனால் இலக்கு மொழியில் பெரிய வரவேற்பு கிடைக்கும். புத்தாக்கம் என்பது மூல நூலின் கருப்பொருளையும் கவித்துவத்தையும் மொழிபெயர்ப்பில் பாதுகாப்பதாகும்.

**புத்தாக்கம்**

ஒரு கவிதையை மொழிபெயர்த்து புத்தாக்கம் செய்யும் போது இலக்கு மொழிக்குரிய சாயலும் தன்மையும் அதில் கூடுதலாக ஏற்றப்படுகிறது. அப்போது அக்கவிதை இலக்கு மொழியில் எழுதப்பட்டது போன்ற தோற்றத்தைப் பெறுகிறது. மூல மொழிச் சாயல் உள்ள பெயர்கள், பாத்திரங்கள் நீக்கப்பட்டு அல்லது மாற்றப்பட்டு இலக்கு மொழிச் சாயம் பூசப்படுகிறது. இலக்கு மொழி ஒலிப்புக்கு, ஏற்றபடி பெயர்களை மாற்றி அமைப்பதாலும் இத்தன்மையைப் பெறலாம். தேம்பாவணியில் இயேசுவின் தந்தை ஜோசப் என்பவரை சூசையப்பர் என்று தமிழ்ப்படுத்தியதால் அவர் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர் போல தோன்றினார்.

லெபனான் இஸ்ரேல் போன்ற இடங்களை வருணிக்கும் போது காவிரிக்கரையில் உள்ள தமிழக நிலப்பகுதியைப் புனைந்துரைப்பது போல் எழுதியதால் சூசை தமிழகத்தில் வாழ்ந்தவர் போல் வாசகரால் கருதப்பட்டார்.

கோசலை நாட்டின் அழகையும் செழிப்பையும் வருணிக்க கம்பர் பின்பற்றிய உத்தியை தேம்பாவணி இயற்றிய வீரமாமுனிவரும் பின்பற்றினார். கத்தோலிக்கத் திருமறையில் ஜான் என்பவரை அருளப்பர் என்றும் பீட்டர் என்பவரை சின்னப்பர் என்றும் ஆட்பெயர்களை தமிழ்ப்படுத்தியதால் அவர்கள் தமிழ்நாட்டவராகக் கிறித்துவ வேதம் வாசிப்போருக்குத் தோன்றினர். இதனால் வாசகருக்கு ரோமன் கத்தோலிக்க விவிலிய மொழிபெயர்ப்புடன் மனம் ஒன்றிப்போனது. மூல மொழியின் அன்னியப் பெயர்களை தமிழாக்குவதால் மொழிபெயர்ப்பைப் புத்தாக்கம் செய்லாம். இதனால் இப்படைப்பு இலக்கு மொழியில் எழுதப்பட்ட புதிய படைப்பாகத் தோன்றுகிறது. மொழிபெயர்ப்பு வாசகருக்கு உள்ளடக்கத்திலும், பெயர்களிலும், பண்பாட்டிலும், அயன்மை தோன்றாது.

இன்னொரு முறையிலும் புத்தாக்கம் நடைபெறுகிறது. இலக்கு மொழியில்

உள்ளவர்களின் பெயர்களை மூலமொழிப் பெயர்களுக்குப் பதிலாக பயன்படுத்துவது அல்லது புதிதாகவே பயன்படுத்துவதாகும்

ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா
உறுதிகொண்ட நெஞ்சினாய் வா வா வா
களிபடைத்த மொழியினாய் வா வா வா

கடுமை கொண்ட தோளினாய் வா வா வா

என்ற மகாகவி பாரதியாரின் கவிதையை மொழிபெயர்த்த பிரேமா நந்தகுமார் கடுமை கொண்ட தோளினாய் என்பதற்கு தைதான் [Titan] என்ற வீரனின் பெயரைப் பயன்படுத்தினார். இது தமிழில் இல்லாத புதுமை. தமிழில் பீமன் என்றோ அர்ஜுனன் என்றோ ஒரு வீரத் தோள் படைத்தவனின் பெயர் குறிப்பிடாத போதும் அவர்இலக்குமொழிவாசகரைமனத்திற்கொண்டு டைட்டன் என்ற பெயரை புதிதாகச் சேர்த்தார். இதனால் இம்மொழிபெயர்ப்பை வாசிக்கும் ஆங்கில மொழி வாசகருக்கு இக்கவிதை ஆங்கிலமொழியில் எழுதப்பட்ட மூலப் படைப்பு போலத் தோன்றும்.

Come come come you with shining eyes
Come come come you with steely heart
Come come come with the honeyed speech
Come broad shouldered Titan, come

அது போலவே

வலிமையற்ற தோளினாய் போ போ போ
மார்பிலே ஒடுங்கினாய் போ போ போ
பொலிவிலா முகத்தினாய் போ போ போ

பொறியிழந்த விழியினாய் போ போ போ

*என்ற கவிதை வரிகளை மொழிபெயர்க்கும் போது பொலிவிழந்த தோளினாய் என்ற தொடரில் 'மானிக்கின்' என்ற பறவையின் பெயரைச் சேர்த்துள்ளார். இப்பறவை வலிமையற்றது சிறியவன் என்ற பொருளில் டச்சு மொழியில் மானிக்கின் என்று வழங்கப்படுகிறது. சிலர் வீட்டுப்பறவையாகவும் இதனை வளர்ப்பதுண்டு. இப்பறவை ஆபத்தில்லாதது. யாரையும் கொத்தாது; தாக்காது. பல அழகிய வண்ணங்களில் காணப்படும் இப்பறவை 50க்கும் மேற்பட்ட வகையில் அமெரிக்கா முழுக்க வெப்ப நிலப்பகுதிகளில் காணப்படுகின்றது. அமெரிக்கர்களுக்கு நன்கு அறிமுகமான எளிய பறவை என்பதால் இதனை மொழிபெயர்ப்பாளர் பயன்படுத்தி இலக்கு மொழிச் சாயல் ஏற்றியுள்ளார். இந்த மொழிபெயர்ப்புச் செயல்முறை மொழிபெயர்ப்புக் கவிதையை, இலக்கு மொழியில் எழுதப்பட்ட சொந்தக் கவிதை போலத் தோன்றச் செய்கிறது. மொழிபெயர்ப்பை, படிக்கும் வாசகருக்கு அயன்மை தோன்றாமல் படைப்புடன் அதிக*

நெருக்கத்தை ஏற்படுத்துகிறது.

You weak shouldered mannikin away away away
You with the shrunken heart away away away
You with the jistless face away away away
You with the lack lustre eyes away away away

**நிறைவு**

இவ்வாறாகக் கவிதை மொழிபெயர்ப்பு என்பது செய்யக்கூடியதே என்றும் விடுநிலைப்பா வடிவில் செய்வது வாசகரைக் கவரும் என்பதும் இக்காலத்திய கருத்தாகும். மேலும் கவிதை மொழிபெயர்ப்பை நெகிழ்ச்சிபடச் செய்வது மொழியாக்கம் என்றும் புதிதாகப் பெறுமொழிக்கேற்ப பலவற்றைச் சேர்ப்பது புத்தாக்கம் என்றும் வெவ்வேறு வகையில் பெயரிடப்படுகிறது. மூலமொழிக்கு நெருக்கமான நிகரன்களோடு அமைந்த மொழிபெயர்ப்பு சரியான மொழிபெயர்ப்பு என்ற சிறப்பைப் பெறுகிறது.



# 2. முத்தமிழ் விரும்பி கவிதைகளின் பன்மொழி மொழிபெயர்ப்பு

கவிதை தான் எல்லாப் பொருட்களுக்கும்
ஒரு தெய்வீக மலராய் விளங்குகிறது;
வாழ்க்கை விருட்சத்தின் உச்சாணியில்
மலரும் வாடாமலர், கவிதை

என்று கவிதைக்கு இலக்கணம் தரும் கவிஞர் முத்தமிழ் விரும்பி செந்தமிழ்ப் புரவலர் என்றும் தமிழ்ச் செம்மல் என்றும் போற்றப்படுபவர். இவர் இயற்றிய ஏழு கவிதைத் தொகுதிகளும் ஆங்கிலத்தில் இந் நூலாசிரியரால் மொழிபெயர்க்கப்பட்டன. இந்தி, கன்னடம் மலையாளம் ஆகிய மொழிகளிலும் இவரது கவிதைத் தொகுதிகள் மொழிபெயர்க்கப்பட்டு அச்சில் வந்துள்ளன.

பொதுவாக, கவிதையை மொழிபெயர்க்கும் போது இலக்கு மொழி ஒரே குடும்பத்தினதாக இருந்தால் பண்பாடு பழக்கவழக்கங்கள் ஒரே மாதிரி இருப்பதால் அதிகம் சிக்கல்கள்

தோன்றாது. இரு வேறு மொழிக்குடும்பங்களுக்கு இடையே மொழிபெயர்க்கும் போது பண்பாடும் பழக்க வழக்கங்களும் மாறுவதால் ஒரு மொழியில் சொல்வது அடுத்த மொழி பேசுவோருக்கு அயன்மையைத் தோற்றுவிக்கும். அப்போது அடிக்குறிப்புகள் மூலம் வாசகருக்கு விளக்க வேண்டும். இலக்கு மொழி ஆங்கிலமாக அமைந்தால் பெரும்பாலும் இச்சிக்கலை சமாளிக்கலாம்; காரணம் ஆங்கில மொழி உலககெங்கும் பரவியிருப்பதாலும் அம்மொழி ஏராளமான பிற மொழிச் சொற்களைக் கடன் வாங்கி தமதாக்கிக் கொண்டதாலும் சொல்வளம் மிக்க மொழியாக இருப்பதால் மொழிபெயர்ப்புச் சிக்கல்கள் வர வாய்ப்புக் குறைவு.

கவிஞர் முத்தமிழ் விரும்பியின் தமிழ்க்கவிதைகள் திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மலையாளம் மற்றும் கன்னடத்திலும் இந்தோ ஐரோப்பிய மொழிக்குடும்பத்தின் இந்தி மற்றும் ஆங்கிலத்திலும் மொழிபெயர்க்கப்பட்டன. மலையாள மொழிபெயர்ப்புப் பழந்தமிழ் போலவும் கன்னட மொழிபெயர்ப்பு தமிழும் சமஸ்கிருதமும் கலந்தும் காணப்படுகிறது. ஆங்கிலம் சிற்சில அடிக்குறிப்பு விளக்கங்களோடு தன்னளவில் தனித்து விளங்குகிறது. இந்தி கடைத்தெரு மொழி என்றாலும் தமிழ் மொழி

போன்ற செவ்வியல் தன்மை இல்லாவிட்டாலும் இரு மொழியில் தேர்ச்சி பெற்ற மொழிபெயர்ப்பாளர்கள் இயல்பாகவே கவிஞர்கள் என்பதால் தமிழ்க் கவிதைகளை மிகச்சரியாக மொழிபெயர்க்க முயன்றுள்ளனர். இம்மொழிபெயர்ப்புக் கவிதைகளில் சிலவற்றை இங்குக் காணலாம்

வறட்சியின் பாடலகள் மற்றும் உன்னோடு உரையாடுதல் தொகுதிகளை நாணற்காடன் என்ற சரவணனும் காதல் மொழி மற்றும் தேனடையும் வரலாறு என்ற தொகுதிகளை வசந்த தீபனும் இந்தியில் மொழிபெயர்த்தனர். வரதன் என்ற மலையாளக் கவிஞர் வறட்சியின் பாடல்கள் மற்றும் உன்னோடு உரையாடுதலை மலையாளத்தில் மொழிபெயர்த்தார். . முனைவர் வனஜா குல்கர்னி உன்னோடு உரையாடுதல் தொகுதியை கன்னடத்தில் மொழிபெயர்த்தார். இப்பன்மொழி கவிதை மொழிபெயர்ப்புகளை அறிமுகம் செய்யும் வகையிலும் அவற்றின் சிறப்பை எடுத்துக்காட்டும் வகையிலும் இக்கட்டுரை அமைந்துள்ளது.

கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பாடுபொருளும் பாசப்பொருளும், பூ மர நிழலில் களமும் காலமும் முத்தமிழ் விரும்பியின் கவிதையில் காதல், 2020 தை மாதத்தில் இன்று என்ற ஒரு நீண்ட கவிதையில் ஆய்வு செய்து

வெளியிட்டஅடிக்கருத்தியல்ஆய்வு போன்றவை அவரது கவிதைகளின் உள்ளடக்கப் பகுப்பாய்வு சார்ந்த திறனாய்வு நுல்கள் ஆகும். இவை கவிஞர் சமூகம், இயற்கை, காதல், குழந்தை , வேளாண்மை, நகர்மயமாக்கம், வறட்சி, மழை, போன்றவை இவரது கவிதையின் கருப் பொருட்கள் என்று விளக்குகின்றன.

## கவிதையும் மொழிபெயர்ப்பும்

கவிதை என்பது வரிக்கு வரி மொழிபெயர்ப்பதாகாது. ஏனெனில் ஒவ்வொரு வரியும் வாசிக்கும் ஒவ்வொருவருக்கும் பலவகைப் பொருன்மையை அளிக்கும். எந்த வரியும் விடுபடக் கூடாது என்றாலும் கவிதையின் மொழிபெயர்ப்பை வாசிக்கும் பொது மூல மொளிக்கவிதையை வாசித்த வாசகர் பெற்ற உணர்வைப் இலக்கு மொழி வாசகரும் பெற வேண்டும். இதுவே மொழிபெயர்ப்பின் வெற்றி ஆகும். வரிக்கு வரி மொழிபெயர்க்காமல் கவிதையின் சாராமசத்தை உள்வாங்கி கவிதை வரி அமைப்புகளை மாற்றியும் மொழிபெயர்க்கலாம். ஆனால் மேலதிகமாக சேர்ப்பதோ எதையும் நீக்குவதோ மாற்றி அமைப்பதோ ஆகாது.

நுண்கலை மருத்துவன் – விடுபட்ட குறிப்புகள் என்ற கவிதை நுலின் ஆங்கில மொழிபெயர்ப்புக்கு திறனுரை வழங்கிய

பேராசிரியர் ஒருவர் அத்தொகுதியில் உள்ள கவிதைகளில் பாதி கோவிட் பெருந்தொற்று பற்றியவை என்றார். ஆனால் மொழிபெயர்ப்பாளருக்கு அவ்வாறு தோன்றவில்லை. காரணம் கவிதையின் ஒவ்வொரு வரியும் வாசிப்போருக்கு வெவ்வேறு விதமான பொருளை வழங்க வல்லது. இதை ஃபின்ஸ்டீன் முதலான பல மொழிபெயர்ப்பறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

கவிதையில் உணர்ச்சி என்பது உயிர், உத்திகள் என்பன உடல் உறுப்புகள் உத்திகளைக் அழகுபடுத்திக் காட்ட உதவும் உடை சொற்கள் . மொழிபெயர்ப்பின் உயிரோட்டமாகத் திகழ்வது உணர்ச்சி. உத்திகளில் கவிநயத்தில் சிலவற்றை மொழிபெயர்ப்பில் கொண்டு வர இயலாது. மூலமொழிக் கவிதையை அழகுபடுத்தும் சொற்களுக்கு மாறாக வேறு இலக்கு மொழிச் சொற்களைக் கொண்டும் மொழிபெயர்ப்பை அழகாக்கலாம். தவறில்லை. இலக்கு மொழி வாசகனுக்கு பிடித்த மாதிரி சொல்லலங்காரம் செய்யலாம். ஆனால் மூலமொழிக் கவிதையின் உயிர்ப்பாக்க விளங்கும், உணர்ச்சியைப் பெறு மொழிக்கவிதையில் கொண்டுவர வேண்டும்.

கவிதை மொழிபெயர்ப்பு என்பது சொல்லுக்குச் சொல், வரிக்கு வரி வரிசை பிறழாமல் இலக்குமொழியில் மாற்றித் தருவதல்ல. அவ்வாறு செய்வதற்கு அகராதி

போதும் அல்லது இன்றைக்குள்ள இயந்திர மொழிபெயர்ப்பு வசதி போதும். மொழிபெயர்ப்பாளருக்கும் மொழிபெயர்ப்புக்கும் ஆத்மார்த்தமான கருத்தொற்றுமை அல்லது உடன்பாடு தோன்ற வேண்டும். மொழிபெயர்த்த பிறகு தானே அந்தக் கவிதையை எழுதியது போன்ற மகிழ்ச்சியும் பெருமிதமும் மனதுக்குள் ஏற்படும்போது மொழிபெயர்ப்பு நிறைவு பெறுகிறது.

மூல மொழிப்படைப்பை அல்லது மூல மொழிக்கவிதையை மொழிபெயர்க்காவிட்டால் அதனைப் பார்க்கும் இலக்கு மொழி வாசகனுக்கு அது பொருளற்ற பிண்டமாகத் தான் தோன்றும். அப் பிண்டத்துக்கு உயிர் கொடுப்பவர் மொழிபெயர்ப்பாளர். அவர் கவிதையின் கருத்தை உட்கிரகித்து மூல மொழிக் கவிஞரின் வார்த்தைகளில் பெறுமொழியில் தெரிவிக்கிறார். மொழிபெயர்ப்பாளரின் பணி ஏறத்தாழ வாடகைத் தாயின் பணியைப் போன்றதாகும். இவ் அடிப்படையில் கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதையை மொழிபெயர்த்த அனைத்து மொழிபெயர்ப்பாளர்களும் தத்தம் பணியைச் சிறப்பாக செய்திருக்கின்றனர்.

**சமூகம்**

கவிஞர் முத்தமிழ் விரும்பி தனது கவிதைகளில் சமூக முன்னேற்றம், தன்னம்பிக்கை, ஒடுக்கப்பட்டோரின் முனைப்பும் முயற்சியும்

*பற்றி பல கவிதைகள் எழுதியுள்ளார். இவருடைய கவிதைகளில் படிம உத்தி பரவலாகக் கையாளப்படுகிறது. இவரது கவிதைத் தொகுதியில் படிமம், தொன்மம், குறியீடு, உவமை போன்ற இலக்கிய நயங்களும் உத்திகளும் புதுமையான முறையில் அமைந்துள்ள கவிதைகள் ஏராளம் அவற்றுள் ஒன்றான. திமிறல் என்ற கவிதையில் ஏகலைவனின் தொன்மக் கதை பொதிந்துள்ளது.*

## திமிறல்

கட்டைவிரல் வெட்டுண்ட
கதாபாத்திரமாய்த் திமிறி
தான் வளரும் மண் சட்டி
உடைக்கும்
குறுந்தாவரம்.

*[முத்தமிழ் விரும்பி - வறட்சியின் பாடல்கள்]*

*இக்கவிதையில் அரச குடும்பத்தினருக்கு மட்டுமே வில்வித்தைப் பயிற்சி அளிக்கும் துரோணர் தனது பயிற்சியை மறைந்திருந்து பார்த்துக கற்றுக்கொண்ட ஒடுக்கப்பட்ட சமூகப் பிரிவினைச் சேர்ந்த ஏகலைவனைப் பாராட்டாமல் அவன் கற்ற வில் வித்தை பயனற்றுப் போகும் படி அவனது கட்டைவிரலை குரு தட்சினையாகக் கேட்டுப் பெறுகிறார். அதன் பிறகும் அவன் சோர்ந்து போகாமல் தனது இடது கையால் பயிற்சி பெற்று சிறந்த*

வில்லாளனாகிறான். இது போல உ. வே சாமிநாதய்யர் அவர்களும் அபிராமண ருக்குத் தான் கல்வி கற்பிப்பதில்லை என்று தெரிவித்த வரலாறு உண்டு. ஆனால் அவரது குரு பிராமணர் அல்லர். திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள். ஆங்கிலத்தில் இக்கவிதை

**Fighting Out**

A tiny plant
Mirrors the character
Who losſt his thumb
And breaks the mud pot.

*('Songs of Dryness', Tr. By. C. Rajeswari)*

என்று மொழிபெயர்க்கப்பட்டது. கவிதையில் வரும் 'திமிறி' என்ற சொல் ஒடுக்கப்பட்ட இளைஞனின் பேரார்வத்தை, முயற்சியை, முனைப்பை அவனது போராட்டவாழ்வைக் குறிக்கிறது. அவன் தனது கல்வி வாய்ப்புக்காக ஆதிக்க சாதியினருடன் அன்றாடம் போராட்ட வாழ்வு நடத்த வேண்டியுள்ளது. ஒரு சிறிய செடியை வாழ விடாமல் மண் சட்டியைப் போட்டு கவிழ்த்து வைத்தாலும் அச்செடி அச்சட்டியை உடைத்துக்கொண்டு தன்னைக் கட்டிப்போட்டதை தகர்த்து எறிந்து திமிறிக்கொண்டு வெளியே வெளிச்சத்துக்கு வருகிறது. இது ஓர் அழகான காட்சிப் படிமமும் ஆகும். அக்காட்சி வாசகருக்குச் சொல்ல வந்த

*செய்தி கண்ணுக்குத் தெரியும் காட்சிக்கு அப்பால் இருக்கிறது. திமிறல் என்ற பண்பை போராட்ட உணர்வை ஆங்கிலத்தில்* Shoots up with violence *என்ற வரி எடுத்துக்காட்டுகிறது.*

*மலையாளத்தில் இக்கவிதையை மொழி பெயர்த்த கவிஞர் வரதன்*

***அகங்காரம்***

தள்ளவிரல் வெட்டுகோல்
கதாபாத்திரமாய
அஹங்கரிச்சு வளருன்னு
மண் சட்டி உடய்க்கும்
குறுஞ்செடி

*(வறழ்ச்சயுடெ பாட்டுகள், மொ.பெ. வரதன்)*

*என்று மொழிபெயர்த்தார். இக்கவிதையில் திமிறல் என்ற கவிப்பொருண்மை ‘அஹங்கரிச்சு’ என்ற சொல்லால்சுட்டப்படுகிறது. ஏகலைவனின் அகம்* [ego] *துரோணரின் வர்க்கபேதத்தின் முன்பு ஆணவத்தின் முன்பு எழுந்து நிற்கிறது. அஹங்கரிச்சு என்ற சொல் மலையாள வாசகருக்கு துரோணர் போன்றவர்களால் கல்வி பெறும் வாய்ப்பு அளிக்கப்படாமல் ஒடுக்கப்பட்டாலும் நாம் எதிர்த்துப் போராடினால் மறுக்கப்பட்ட வாய்ப்புகளைப் பெறலாம் என்ற உணர்வை உருவாக்குவது திண்ணம். இதனால் மூலமொழிக் கவிஞரின் பாடுபொருளாளும் கவிதையின்*

*உணர்ச்சியும் இலக்கு மொழி வாசகருக்கு மிகச் சரியாகச் சென்று சேரும்.*

## வேளாண் நிலங்களை விற்றல்

*கவிஞர் முத்தமிழ் விரும்பி பொறியியலில் முது கலைப் பட்டம் பெற்று அரசுத் துறையில் உயர் அதிகாரியாகப் பொறுப்பேற்று இருந்தாலும் அவர் பரம்பரையாக காவேரி நதியின் கடைமடைப் பகுதியில் மிகப் பெரிய நிலப்பரப்பில் நெல் வேளாண்மை செய்து வரும் விவசாயியும் ஆவார். இவருடைய சமூக அக்கறைகளில் முக்கியமானது தமிழ்நாட்டின் பல பகுதிகளில் பருவ மழை தப்பிப் போவதும் குறிப்பாகக் கடைமடைப் பகுதிக்கு நீர் வரத்தின்மையும் தமிழகமெங்கும் விவசாயிகள் வேளாண்மை செய்வதில் இலாபம் இல்லை என்று விளைநிலங்களை விற்றுவிட்டு நகரங்களுக்குப் புலம் பெயர்ந்து போவதும் ஆகும். புலம் என்ற கவிதை இக்கருத்தை எடுத்துரைக்கிறது.*

## புலம்

ஒரு யுகத்துக்கு முன்னர்
விற்றுப் பெயர்ந்த
புஞ்சைக் காட்டிடை நிற்கும்
உதிர்ந்த வேல மரத்தின்
மேலே கிளைத்தது
வெண்ணிலா பழம்

*[முத்தமிழ் விரும்பி - வறட்சியின் பாடல்கள்]*

இக்கவிதை விற்றுப்போன புஞ்சை நிலத்தை வெகு நாட்கள் கழித்து வந்து பார்க்கும் இளைஞனின் பார்வையில் இயற்றப்பட்டது. .

இலைகள் உதிர்ந்து நிற்கும் ஒற்றை வேல மரத்தின் காய்ந்த கிளைகளில் இனி இலைகள் தளிர் துளிர்க்க வாய்ப்பில்லை என்ற வருத்தம் சுரக்கும் வேளையில் தோன்றிய சந்திரோதயம் அம்மரத்தில் ஒரு பழம் பழுத்தது போல் காட்சியளித்தது. வெண்ணிலாப்பழம் பற்றிய உருக்காட்சியும் [imagery] வாசகனுக்கு நம்பிக்கையை விதைக்கிறது. பழம் ஏன்பது நல்ல விளைவின் குறியீடாகும். இவ்வகையில் . முத்தமிழ் விரும்பியின் கவிதைகள் தன்னம்பிக்கை ஊட்டுபவை ஆக்கப்பூர்வமான சிந்தனையைத் தூண்டுபவை.

புலம் என்ற இக்கவிதையை ஆங்கிலத்தில்

**Land**

Before an era
That dry land sold
And we left
In it stands a white Vela tree
Leaves shed
Branched above
A white moon fruit

*('Songs of Dryness' Tr.C. Rajeswari)*

*ஆங்கிலத்தில் fruit என்ற சொல் fruition, fruitful என்று பல வடிவில் நற்பலன் என்ற கருத்தை உள்ளடக்கியது. வெண்ணிலாவை வெள்ளித் தட்டு என்று உவமிக்காமல் அதனைக் காய்ந்த மரத்தோடு இணைத்து வெண்ணிலாப் பழம் என்று கவிஞர் குறிப்பிட்டதன் மூலமாக இன்னும் நம்பிக்கை உண்டு சோர்ந்து போக வேண்டாம் என்று இளைஞருக்கு நம்பிக்கை ஊட்டுகிறார்.*

***புலம்** என்ற கவிதையை மலையாளத்திலும் புலம் என்ற பெயரிலேயே வரதன் மொழிபெயர்த்தார்.*

***புலம்***

ஒரு யுகத்தின் முன்னு
விற்றுப் பிரிஞ்ஞு
புஞ்சக்காட்டிண்டகு நில்கும்
உதிர்ந்த வேல மரத்தின் மேலே
தளிர்த்தென்னோ
வெண்ணிலா பழம்

*(வறழ்ச்சயுடெ பாட்டுகள், மொ.பெ. வரதன்)*

*கவிஞர் வரதன் தூய மலையாளத்தில் மட்டுமே மொழிபெயர்க்கும் கொள்கை உடையவர் என்பதால் கவிதையில் மரம் என்ற சொல்லை விருட்சம் என்று மொழிபெயர்க்கவில்லை. வெண்ணிலாவை சந்திரிகா என்று மொழிபெயர்க்கவில்லை. மலையாளம் தமிழில்*

*இருந்து பிரிந்து சென்ற மொழி என்பதால் . மலையாளத்தில் இருக்கும் சொற்கள் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு தமிழில் வழங்கியவை ஆகும். எனவே இம் மலையாளக்கவிதை தமிழாகவே தோன்றுகின்றது தளிர்த்தென்னோ என்ற சொல் நம்பிக்கை ஊட்டும் வகையில் அமைந்துள்ளது.*

*சரவணன் 'புலம்' என்ற கவிதையை இந்தியில் ஸ்தலம் என்ற பெயரில் மொழிபெயர்த்தார்.*

स्थल
इक युग से पहले
बिक दिये
सूखे खेत में उठ खडी
गिरी हुई सफ़ेद बबूल पेड
ऊपर की शाखा बनी है
सफ़ेदी चांद का फ़ल

*('Sukepan ganayeng' – Tr. Saravanan)*

*மொழிபெயர்ப்பாளர் சரவணன் என்ற நாணற்காடன் வெண்ணிலா பழத்தை சந்த் கா ஃபல் என்று இந்தியில் குறிப்பிட்டார். புலம் என்பதை இந்தியில் ஸ்தலம் (ஓர் இடம்) என்றளவில் மட்டுமே குறிப்பிட்ட முடிந்ததற்கு காரணம் தமிழைப் போல இந்தியில் சொல்வளம் இல்லை. தமிழின் புலம் விற்று விட்டுப் போன*

இடத்தையும் விற்றவர்கள் புலம் பெயர்ந்ததையும் ஒரு சேரக்குறிக்கும் பொருள் ஆழம் படைத்த சொல்.

## நகர்மயமாக்கம்

நகர்மயமாக்கம் என்பது உலகமயமாக்கல் என்ற பொருளாதாரக் கொள்கையின் முக்கிய விளைவாகும். வேளாண் நிலங்கள் விற்கப்படுகின்றன. நகரங்கள் தீப்பெட்டி அடுக்குகள் போல அடுக்கங்களைக் கட்டி மனிதர்களை இயற்கையை விட்டு வெகு தொலைவுக்கு அழைத்துச் சென்றுவிட்டன. கிராமத்து இளைஞர்கள் நிலங்களை மனையடியாக்கி விற்று விட்டு நகரங்களுக்குக் குடிபெயர்கின்றனர். அங்கு குடியிருக்க கூட இடவசதி நிரம்பிய வீடு கிடைக்காமல் அவதிப்படுகின்றனர். இந்நிலைமை கண்டு கவலையுறும் கவிஞர் இவற்றைப் பாடு பொருளாககக் கொண்டு கவிதைகளை வடித்துள்ளார். இந்நிலையில் சென்னையில் அடுக்கங்களுக்கு நடுவே தென்னை மரம் நிற்கும் ஒரு பழைய ஒரு ஓட்டு வீடு அவருக்கு அதிசயமாகத் தோன்றுகிறது.

***'நித்யம்'*** என்ற கவிதையில் கவிஞர் முத்தமிழ் விரும்பி இளைஞருக்குத் தன்னம்பிக்கை ஊட்டும் ஒரு கருத்தை உட்பொதிந்து வைத்துள்ளார். அடுக்ககங்களுக்கு

இடையில் உள்ள அந்த இடுக்கான இடத்திலும் தென்னை மரம் ஒன்று தனக்கென ஒரு வழியைக் கண்டுபிடித்து ஒளியைத் தேடிச் சாய்ந்து வளர்ந்து மகிழ்ச்சியில் சிலிர்த்து நிற்கிறது. அதன் ஓலைகள் பசுமையாக காணப்படுகின்றன. அங்குக் காற்று வீசுகிறது அதனால் தென்னை ஓலைகள் அசைகின்றன. மரம் தனக்கு வேண்டிய காற்றும் ஒளியும் கிடைத்ததால் சிலிர்த்து நிற்கிறது. இக்கவிதையில் இந்த மரம் வெறும் காட்சி விளக்கம் அல்ல. எத்தகைய இக்கட்டான சூழ்நிலையிலும் ஒருவனால் தனக்கானவற்றைத் தேடிப் பிடித்து மகிழ்ச்சியாக வாழ முடியும், மனம் இருந்தால் மார்க்கம் உண்டு என்ற கருத்து விளக்கப்படுகின்றது.

**நகர் மாசு**

நித்யா என்ற கவிதை பரபரப்பான நகருக்குள் காணப்பட்ட ஒரு ஓட்டு வீட்டைப் பற்றியதாகும். அங்கு ஒரு சாய்ந்த தென்னை மரம் தனது ஓலைகளை வீசி குளிர்ந்த காற்றைக் கொண்டு வருகிறது. இக்கவிதை நகர்மயமாக்கலையும் நெகிழிப் பயன்பாட்டால் நகரங்களுக்கு ஏற்படும் சுகாதாரக் கேட்டையும் அடுக்ககங்களின் வளர்ச்சியால் உண்டான காற்று மாசு பற்றியும் நகர்மயமக்கலின் பல்வேறு பிரச்னைகளைக் கருப்பொருளாகக் கொண்டுள்ளது. சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்ற தொல்காப்பிய

*உத்தியைக் கொண்டு கவிஞர் இக்கவிதையைப் படைத்துள்ளார். கவிஞர் முத்தமிழ் விரும்பி தன்னுடைய கவிதைகளில் வெற்றுச்சொற்களை அல்லது அலங்காரச் சொற்களைப் பயன்படுத்துவது கிடையாது. எனவே அவரது கவிதை செதுக்கப்பட்ட சிலை போல கன கச்சிதமாக இருக்கும்.*

***நித்யம்***

நெகிழிச் சாமான்கள் புழங்கும்
பெருநகர் வீதியில்
கான்கிரீட் பெட்டிகளின் அடைசலில்
பரம்பரை இருப்பென

ஆழ் சுவாசமொன்று தர
வாய்த்தது இவ் ஓட்டு வீடு
சிலிர்த்து நிற்கும்
சாய்ந்த தென்னையின்
பச்சை விசிறல்

*[முத்தமிழ் விரும்பி - வறட்சியின் பாடல்கள்]*

*இக்கவிதையில் கவிஞர் முத்தமிழ் விரும்பி இளைஞருக்குத் தன்னம்பிக்கை ஊட்டும் ஒரு கருத்தை உட்பொதிந்து வைத்துள்ளார். அந்த இடுக்கான இடத்திலும் தென்னை மரம் தனக்கென ஒரு வழியைக் கண்டுபிடித்து ஒளி தேடிச் சாய்ந்து வளர்ந்து சிலிர்த்து நிற்கிறது. அதன் ஓலைகள் பசுமையாக காணப்படுகின்றன. அங்குக் காற்று வீசுகிறது அதனால் தென்னை*

ஓலைகள் அசைகின்றன. மரம் தனக்கு வேண்டிய காற்றும் ஒளியும் கிடைத்ததால் சிலிர்த்து நிற்கிறது. இக்கவிதையில் இந்த மரம் வெறும் காட்சி விளக்கம் அல்ல. எத்தகைய இக்கட்டான சூழ்நிலையிலும் ஒருவனால் தனக்கானவற்றைத் தேடிப் பிடித்து மகிழ்ச்சியாக வாழ முடியும் என்ற கருத்துப படிமம்ஆகும்.

நித்யம் என்ற கவிதைஆங்கிலத்தில் *Eternity* என்ற பெயரில் மொழிபெயர்க்கப்பட்டது.

**Eternity**

Messed with plastics
In the metro streets;
Among the dumped concrete boxes,
As an inherited existence_
With the deep breath obtained
This old tiled roof house

Shoots and stood
The slanting cococnut tree
With green cool fanning

*(Songs of Dryness, Tr. By. C. Rajeswari)*

இம்மொழிபெயர்ப்பு, தமிழ்க் கவிதையை அடி பிறழாமல் எந்த ஒரு சொல்லையும் விட்டுவிடாமல் வார்த்தைக்கு வாரத்தை வரிக்கு வரி அப்படியே மொழி பெயர்த்துக் கவிதையின்

*கருத்தையும் கவித்துவத்துவத்தையும் இம்மியும் இழக்காமல் ஆங்கிலத்தில் கொண்டு வர முனைந்துள்ளது.*

*மலையாளத்தில் வரதன் இக்கவிதையை 'நித்யம்' என்ற பெயரிலேயே மொழிபெயர்த்தார். அவரும் முத்தமிழ் விரும்பியின் கவிதையை சேதப்படுத்தாமல் கூடுதலாக எதையும் சேர்க்காமல் நீக்காமல் செதுக்காமல் உள்ளது உள்ளபடி உணர்ச்சி மாறாமல் மொழி பெயர்த்துள்ளார்.*

**நித்யம்**

பிலாஸ்டிக் வஸ்துக்கள் நிறயும்
பெரு நகர வீதியில்
கோங்கிரீட் பெட்டிகளுடெ அடுக்கலின்
பரம்பர நீக்கியிரிப்பென்னு
தீர ஷ்வாசமொன்னெடுக்கான்
வகை நல்கிய ஒடு வீடு
நிலத்தில் நில்குன்னு
உணங்கிய தெங்கின்
பச்ச வீஷல்

*(வறழ்ச்சயுடெ பாட்டுகள், மொ.பெ. வரதன்)*

*இக்கவிதையை 'நித்யா' என்ற பெயரில் சரவணன் இந்தியில் மொழிபெயர்த்தார். இம்மொழிபெயர்ப்பு வருமாறு*

## नित्य

प्लास्टिक सामानों से भरे
शहर की गली में
कांक्रीट पेटियों के सघन में
जैसे परंपरा के अस्तित्व पर
गहरी स्वास देनेवाले घर
मिला है.
पास में झुकाव नारियल का
हरियाली का फुहार

*('Sukepan ganayeng' – Tr. Saravanan)*

***காதல்***

*காதலைப் பாடாத கவிஞன் இல்லை. கவிஞர் முத்தமிழ் விரும்பி கவியரங்கில் கவிதாயினி ஒருவரைக் கண்டு அவரது கவிதையைக் கேட்டு ரசித்து மகிழ்ந்து காதலித்துத் திருமணம் முடித்தவர் என்பதால் அவர் நிறைய காதல் கவிதைகள் எழுதியிருக்கிறார். அவற்றில் ஒன்று*

***மலர்த்துகிறாய் கண்ணா***

உயிரின் நிறமா நீ?
கவிதைக் கருவின் வரமா?
வான் பூத்து நிற்கும் தேவமரமா?

என்னுள் கிளைத்து விரித்து
கிளர்த்துகிறாய்
உயிரை அணு அணுவாய்
மல்ர்த்துகிறாய் கண்ணா

*[முத்தமிழ் விரும்பியின் 'உன்னோடு உரையாடுதல்']*

*இக்கவிதை காதலியின் குரலாக உள்ளது. இதனை கன்னடத்தில் மொழிபெயர்த்த முனைவர் வனஜா குல்கர்னி*

Priyathama aralisu
Usira bannavuu ni
Kavitheya bhruunada varavoo
Aakasa vrksha aralisi ninta
Deva vrksha
Enna kavalodedu aebbisuva
Usiranu anuanuvaagi aralisu
Priyakaranee

*இக் கவிதை கன்னட மொழிபெயர்ப்பிலும் தமிழில் காணப்படும் அவன் அவளது உயிரின் நிறம், கவிதைக்கருவின் வரம், வான் பூத்து நிற்கும் தேவ மரம் என்பவையும் அவன் அவளைக் கிளர்ச்சிக்கு உள்ளாக்குவதும் சரியாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. நிறைவாக கண்ணா என்ற தமிழ்ச் சொல் பிரியகாரனே [அன்பிற்கு உரியவனே] என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. தமிழ்க் கவிதையின் உணர்ச்சியோ சொற்களோ வடிவமோ உள்ளடக்கமோ எதுவும் விடுபடவில்லை.*

*ஆங்கிலத்தில் மலர்த்துகிறாய் கண்ணா என்ற கவிதை வேறு தலைப்பில் மொழிபெயர்ப்பானது. அத் தலைப்பின் பெயர்* The Color of Life, *மலர்த்துகிறாய் என்ற சொல்லின் அழகையும் பொருளையும் ஆங்கிலத்தில் சொல்ல முடியாததால் தலைப்பு* The Color of Life *மாற்றப்பட்டுள்ளது.*

The Color of Life
Are you the color of Life?
The blessing
Of the poem's theme?
The celestial tree
Flowering towards the sky?

In me
You branch out and spread
And excite me.

You flourish in my life
Cell by cell
My man!

*(Speaking with You, Tr. By C. Rajeswari)*

*ஆங்கிலம், கன்னடம் ஆகிய இரு மொழிகளிலும் மூல மொழிக்கருத்து சரியாக பெயர்க்கப்பட்டுள்ளது. கவிதையின் காதல் உணர்ச்சி இரண்டிலும் வெளிப்படுகிறது.*

*இன்னொரு கவிதை ஐந்தே வரிகளில் தனக்கு வேண்டிய மிகப் பெரிய விலைமதிப்பில்லா பரிசை காதலன் தன் காதலியிடம் கேட்பதாக இயற்றப்பட்டுள்ளது.*

இற்றைக் கணத்தின்
இடர் களைய
வாயமுதமல்ல
கண்ணே
வாழ்வமுதம் தா.

*(முத்தமிழ் விரும்பியின் 'காதல் மொழி')*

*இக்கவிதை காதல் தோன்றும்போது உள்ள மன அழுத்தத்தைத் தெரிவித்து அது நஞ்சைப் போல் அவனைக் கொல்கிறது. அக்கொடுமையினின்று அவன் தப்பிப் பிழைக்க அவனுக்குக் காதல் நோய் தீர் க்கும் அமுதம் தேவை. அந்த அமுதமும் மற்ற காதலர்கள் வேண்டும் வாயமுதம் அல்ல; எந்நாளும் வாழ்வளிக்கும் வாழ்வமுதம் என்கிறான். என் துன்பம் தீர்த்து இன்ப வாழ்வு கொடு என்று கேட்கிறான்.*

*இக்கவிதையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர் அமுதம் என்பதை ஒரு பொருளின் பெயரைக் குறிக்கும் பெயர்ச்சொல்லாகக் கொள்ளாமல் பெயரடையாகக் கொண்டு மொழிபெயர்த்தார்.*

**Ambrosial Kiss**

Oh dear
relieve me
from the suffering
of this moment
- so painful
Dont want
An ambrosial kiss
Gift me
An ambrosial Life

*(The Language of Love, Tr. By. C. Rajeswari)*

*மார்ஷி பவர்* The poem ‘Ambrosial Kiss’, my favorite in the collection, illustrates the poet’s desire to make a life with his love, not a desire merely for a fleeting kiss or passing connection:

“Don’t want
An ambrosial Kiss
Gift me
An ambrosial life.”

This passage perfectly illustrates the poet’s desire for something real, powerful, and lasting – beyond the passion or the words spoken *என்று இக்கவிதையை தனக்கு மிகவும் விருப்பமான கவிதை என்கிறார்.*

*இம்மொழிபெயர்ப்பு அமுதம் என்பதை அடைமொழியாகக் கொண்டு அமுதம் போல்*

இனிக்கும் முத்தம் தேவையில்லை அமுதம் போல் என்றென்றைக்கும் நிலையாக இருக்கும் காதல் வாழ்க்கை தான் தேவை என்கிறது. திருவள்ளுவர்

'பாலோடு தேன் கலந்தற்றே பனிமொழி தன்
வாலெயிறு ஊறிய நீர்

என்று முத்தத்தின் சுவையை உணர்த்தினார். கோதை ஆண்டாள் கண்ணனின் வாய்ச் சுவையின் தித்திப்பையும் வாசத்தையும் ,

'கற்பூரம் நாறுமோ கமலப் பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித்திருக்குமோ'

என்றாள். பால், தேன், தித்திப்பு, பூ வாசம் ஆகிய உலகப் பொருட்களை விடுத்து தேவர்களின் நிலையான வாழ்வுக்குத துணையா க விளங்கும் அமுதத்தை கவிப் பொருளாக்கினார். எல்லோரும் வேண்டுவது வாயமுதம் ஆனால் நான் வேண்டுவதோ அதுவல்ல வாழ்வமுதம் என்றார். வாழ்வமுதம் என்ற சொல்லால் காதல் என்பது அழியாதது; மரணமிலாப் பெரு வாழ்வு உடையது; நித்திய ஜீவியமாவது; என்ற கருத்தை முத்தமிழ் விரும்பி குறிக்கிறார். இக்கருத்தில் ஆங்கிலத்தில் ambrosial life என்ற நிகரன் தெரிவு செய்யப்பட்டுள்ளது.

கன்னடத்தில் வாழ்வமுதம் கவிதையை வனஜா குல்கர்னி மொழிபெயர்த்த போது

*அமுதத்தைப் பெயர்ச்சொல்லாகக் கொண்டு மூல மொழியில் இருப்பதைப் போலவே மொழிபெயர்த்தார்.*

ஈ க்ஷணத்து [Ii Kshanada]
இடரு நீக்கலிகே [ Edaru Niigalike]
அதராம்ருத பேடா [Adharaamrutha Beeda]
ப்ரிய [Priya]
ஜீவனாம்ருத நீடு [Jiivanaamruta Niidu]

*இக்கவிதையை அவர் முதலில் மொழிபெயர்த்த போது அதராம்ருதம் என்ற சொல்லுக்குப் பதிலாக சும்பனாம்ருதம் என்ற சொல்லைத் தெரிவு செய்தார். அது உதடுகளில் தரப்படும் முத்தம் என்று பட்டவர்த்தனமாக தெரிவித்ததாலும் காதல், காமம் ஆகியன இல்லை மறைகாயாக தெரிவிக்கப்பட வேண்டியவை என்பதாலும் அதை அதராம்ருதம் என்று மாற்றினார். அதரம் என்பதும் உதடுகளைத் தான் குறிக்கிறது என்றாலும் சுண்டு, சும்பனம் என்ற சொற்களை விட அதரம் செவ்வியல் தன்மை உடையதாககத் தோன்றுகிறது. கவிதைக்கு அழகு சேர்க்கிறது. தமிழிலும் இக்கவிதையில் உதடு என்ற சொல் காணப்படவில்லை. அதராம்ருதம் ஜீவனாம்ருதம் என்பன இரண்டும் வாயமுதம் வாழ்வமுதம் என்பவற்றிற்கு இணையாக அழகிலும் அளவிலும் ஒத்துச் செல்கின்றன.*

*இந்தியில் வாழ்வமுதம் கவிதையை வசந்த தீபன்*

जीवन का अमृत दो ।

वर्तमान क्षण का

जोखिम दूर करने केलिए

मुंह का अमृत नहीं

प्रिय !

जीवन का अमृत दो ।

(வதிமான் க்ஷண கா
செகிம் துர்கானே கேலியே
முஹ்கா அமுத நஹி
ப்ரிய
ஜீவன்கா அமுத் ஹாய் )

*(Ishk Ki Baasha, Tr. By Vasantha Dheepan)*

*என்று மொழிபெயர்த்தார். இக்கவிதையில் முஹ் என்ற சொல் வாய் என்பதையே குறிக்கிறது. வாயமுதம் வேண்டாம் என்று நேரடியாக மொழிபெயர்த்தார். வாழ்வமுதம் என்பதை ஜீவன்கா அமுத் என்றார். தமிழில் உள்ளதை உள்ளபடி இந்தியில் சரியாக எவ்வித மாற்றமுமின்றி மொழிபெயர்த்துள்ளார்.*

## இரு நோக்கு இவள்கண் உள

*காதலியை பற்றி காதலன் ஐயுற்றுத் தெளியும் மற்றொரு கவிதை 'ராட்சசியா?' என்பதாகும்.*

*இக்கவிதை வள்ளுவரின் ஒரு கருத்துடன் ஒப்பு நோக்கத்தக்கது. திருவள்ளுவர் காமத்துப்பாலில் காதலியைப் பற்றி காதலன் சொல்வதாக வரும் குறளில் 'இவளிடம் இரு நோக்கு உண்டு ஒன்று நோய் தரும்; மற்றொன்று அந்நோய்க்கு மருந்தாகும்'' என்பார். அது போல கவிஞர் முத்தமிழ் விரும்பியும் காதலியைப் பற்றிக் காதலன் கூற்றில் இவள் ராட்சசியா? என்று ஒரு கவிதை இயற்றியுள்ளார்.*

*இக்கவிதை பற்றி 'காதல் மொழி' கவிதைத் தொகுதியின் அணிந்துரையில் பேரா. தே. ஞானசேகரன் 'பிவருமாறு குரிப்பிடுகிறார்.' எல்லாக்காதலன்களுக்கும்அவரவர்காதலிஏனோ ராட்சசியாக ஆகிவிடுகிறாள்.*

***ராட்சசியா?***

சமயா சமயத்தில்
நினைவலைகள்
துள்ளி எழுந்து
நனைக்கிறது குளிர்
இவள் ராட்சசியா?
இல்லை
ரட்சகி தான்
என்கிறது
நள்ளிருள் விழிப்பு

*[முத்தமிழ் விரும்பியின் 'காதல் மொழி']*

என்கிற இந்தக் கவிதை பெண்ணின் நட்பு எப்படியானது என்றால் அவள் சில நேரங்களில் நெருப்பாய் இருக்கிறாள் *[ராட்சசி]* பல நேரங்களில் குளிராய் இருக்கிறாள் *[ரட்சகி]''* இக்காதல் கவிதை ஆங்கிலத்தில் *A Demoness* என்ற தலைப்பில் மொழிபெயர்க்கப்பட்ட போது

***A Demoness***

At times
The waves of memories
Gallops on
And the chillness
Make them cool
'Is she
A demoness?
No never
She is
A saviour'
Declared
The midnight wakeup.

*(The Language of Love, Tr. By. C. Rajeswari)*

ஆங்கிலத்தில் நினைவலைகள் துள்ளி எழுவது குதிரையின் ஆவேசத் துள்ளலைக் குறிக்கும் gallop என்ற சொல்லால் குறிக்கப்பட்டது. இம்மொழிபெயர்ப்பு நூலுக்கு அணிந்துரை வழங்கிய அமெரிக்க பெண் மருத்துவர் மார்ஷி

*பவர்* "The Language of Love" that he refers to is, of course, silences itself. This is both beautiful (in that no words are needed to feel that passion) and sad (in that we can never truly know our partner). He plays with this juxtaposition of emotion from the very beginning of the collection – in the second poem, 'A Demoness', he asks

'Is she
A demoness?'
"No never,
A savior"

*என்று இக்கவிஞரின் சிறப்பை குறிப்பிட்டுள்ளார்.*

*ராட்சசியா என்ற கவிதையை வசந்த தீபன் இந்தியில் க்யா தூ ஏக் தானவ் என்ற பெயரில் [நீ என்ன ராட்சசியா?] அவளை நோக்கியே கேள்வி கேட்கும் விதத்தில் மொழிபெயர்த்தார்.*

क्या तू एक दानव ?
समय समय पर
स्मृति तरंगे
उछलते उठकर
भिगोते सर्दी ।
क्या एक दानवी
यह ?
नहीं कभी नहीं
एक रक्षसक ही

कि कहते हैं

आधी रात का जागरण ।

(க்யா தூ ஏக் தானவ்
சமய சமய் பர்
ஸ்மிருதி தரங்கெ
உச்லதே உட்கர்
பிகொதே சதீ
கா ஏக் தான்வி
ய்ஹ்
நஹி கபி நஹி
ஏக் ராக்ஷசக் ஹி
கி கஹதே ஹைன்
அபிராத் கா ஜாgaரன் )

*(Ishk Ki Baasha, Tr. By Vasantha Dheepan)*

*இம்மொழிபெயர்ப்பில் வசந்த தீபன் நினைவலைகளை 'ஸ்மிர்தி தரங்கெ' என்கிறார். 'உச்லதே உட்கர்' என்று நினைவுகள் துள்ளி எழுவதை அதன் உற்சாகத் துள்ளலை இந்தியில் வெளிப்படுத்துகிறார்.*

*தமிழில் கவிஞர் இவள் ராட்சசியா? என்று படர்க்கையில் காதலியை நிறுத்திக் கேட்ட வினாவை இந்தியில் மொழிபெயர்ப்பாளர் நீ [தூ ஏக் ] என்று அவளை முன்னிலைப்படுத்தி 'நீ ஒரு ராட்சசியா? என்று கேட்கிறார். இது உரையாடல் பாணிக்குக் கவிதையை மாற்றுகிறது. காதலினால்*

ஒருவன் படும் அவஸ்தை சுய புலம்பலாக த்காமிழ்க் கவிதையில் வெளிப்பட்டது. "அவள் ராட்சசியா என்னை கொல்கிறாளே இல்லை அவள் தான் என்னை காப்பாற்றிய ரட்சகி" என்று காதலியை இரண்டு நிலையில் வைத்துப் பாராட்டுகின்ற தன்மை மாறி நேரில் நிறுத்தி குற்றம் சாட்டுவதாக இந்திக் கவிதை காட்டுகிறது.

## நிறைவு

அமெரிக்க ஆங்கில இலக்கியத் துறையில் புதிய வடிவங்கள் மற்றும் உத்திகளைப் புகுத்தி பெரும் கவிதை புரட்சியை ஏற்படுத்திய எஸ்ரா பவுண்ட் கவிதை மொழிபெயர்ப்புப் பற்றிக் குறிப்பிடும் போது இலக்கு மொழியில் சொற்களைத தெரிவு செய்யும்போது அவற்றில் மின்சாரம் பாய வேண்டும், இம்மின்சாரம் சிறிதும் வீணாகக் கூடாது என்பார். வள்ளுவப் பெருந்தகையார்

சொல்லுக சொல்லில் பிறிதொரு சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து

என்று சொல் தெரிவு பற்றிக் கூறியதை மொழிபெயர்ப்புக்கும் பொருத்தலாம். இக்கட்டுரையில் எடுத்துக்காட்டப்பட்ட பன்மொழி மொழிபெயர்ப்புகள் பவுண்ட் கூறியதைப் போல தமிழ்ச் சொற்களின் சக்தியை மிகுந்த ஆற்றலுடன் அப்படியே பிரதிபலிக்க

முனைந்தன. சமூகம், கிராமியம், நகர்மயமாக்கம், காதல் என்று கருப்பொருள் எதுவாயினும் தமிழ்க் கவிதையில் இருந்த நெருப்பை மொழிபெயர்ப்புகள் அணையாமல் பாதுகாத்தன. தமிழ்க் கவிதையின் கனமான கருத்தை நீர்த்துப் போக விடவில்லை. மென்மைப் படுத்தவில்லை. மேன்மைப்படுத்தின. முத்தமிழ் விரும்பியின் கவிதைகளின் பன்மொழி மொழிபெயர்ப்புகள் அவரது தமிழ்க் கவிதையின் சிறப்பைப் பன்மொழி வாசகருக்கு எடுத்துச் செல்கின்றன. தமிழின் கவிச்சுவையை அவர்களுக்கு ஊட்டி மகிழ்விக்கின்றன. தமிழ்க் கவிதையின் பாடுபொருளை உலகப்பொதுப் பாடுபொருளாக உயர்த்துகின்றன.



# 3. கவிதை மொழிபெயர்ப்பில் உவமை

*கவிதை என்பது உவமை, படிமம், குறியீடு, சொல்நயம் போன்ற அழகியல் கூறுகளால் ஆனது. இவற்றில் உவமை என்பது பேச்சிலும் உரைநடையிலும்கவிதையிலும்பழமொழியிலும் பெருவழக்காகக் காணப்படுகிறது. தொல்காப்பியர் உவமயியல் என்று ஒரு தனி இயல் அமைத்தது உவமைகளின் சிறப்பை விளக்குகிறது. உவமை நான்கு வகைப்படும் என்பதை*

வினை பயன் மெய் உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம் [1222]

*என்ற நூற்பா விளக்கும்.*

வினை — புலி போலப் பாய்ந்தான்
பயன் — மழை போல வாரி வழங்கினான்
மெய் — மூங்கில் போன்ற தோள் [வடிவம்]
உரு — தாமரை போல் சிவந்த பாதங்கள் [வண்ணம்]

*இவ்வுவமைகள் நான்கு களங்களின் அடிப்படியில் தோன்றும் என்பதை*

சிறப்பே நலனே காதல் வலியோடு
அந்நாற் பண்பும் நிலைக் களம் என்ப [1225]

தொல்காப்பியர், உவமைகளைப் பயன்படுத்தும் போது கவிதையில் சுட்டப்படும் பொருளை விடச் சிறந்த வேறொரு பொருளை ஒப்பிட்டு உவமையாக்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தி

'உயர்ந் ததன் மேற்றே உள்ளுங் காலை'

என்கிறார். ஒரு பொருளை, சிறப்பிக்கும் போது உவமையைப் பயன்படுத்த வேண்டும். அதனினும் தாழ்ந்த ஒரு பொருளை உவமையாக்கி சுட்டக் கூடாது.

உவமை என்பது கவிதையின் சிறப்புத் தன்மை ஆகும். ஒரு கவிதையில் இது போல அது என்று ஒப்பிடும் போது 'போல, புரைய, ஒப்ப உறழ' என்று உவம உருபுகளைப் பயன்படுத்துவது இயல்பு. தொல்காப்பியரும் உவம உருபுகளின் பட்டியலை கொடுத்துள்ளார். ஆயினும் அவர் உருபு இல்லாமலும் உவமைகளைப் பயன்படுத்த முடியும் என்றார்

சுட்டிக் கூறா உவம மாயின்
பொருள்எதிர் புணர்த்துப் புணர்ந்தனர் கொளலே
[1229]

என்ற நூற்பா உவம உருபு இல்லாமலும் உவமத் தொடர் வரும் என்கிறது. இதனையே

பின்னர் வந்த இலக்கண ஆசிரியர்கள் உவமத் தொகை என்று பெயரிட்டு அழைத்தனர்.

பொருளே உவமமாக வந்தால் அதனை உருவகம் என்றார் தொல்காப்பியர். மலர் போன்ற விழி என்றால் உவமத் தொடர், மலர்விழி என்பது உவமத் தொகை. விழி மலர் என்றால் உருவகம். விழியே மலராகத் தோன்றுகிறது என்றால் பொருளே உவமம் ஆயிற்று. தமிழில் ஏராளமான உவம உருபுகள் காணப்படுகின்றன. ஆனால் ஆங்கிலத்தில் Like, As, Mirrors எனச் சில சொற்களே உவம உருபுகள் போல செயல்படுகின்றன.

## வினை/செயல் சார்ந்த உவமைகள்

வினை என்பது செயல்பாட்டைக் குறிக்கிறது. ஒரு சிறுசெடி தான் வளரும் மண்சட்டியைக் கீறி உடைத்துக்கொண்டு வளர்கிறது. 'மீறல்' என்ற இக்கவிதையில் கவிஞர் முத்தமிழ் விரும்பி சிறுசெடி மேற்கொண்ட போராட்டத்தின் வெற்றியை, தடையை உடைத்து, மீறி வளர்ந்த அதன் செயலை ஏகலைவனின் மீறலோடு உவமிக்கிறார். அவன் தன்னை வில் வித்தையில் ஈடுபடக் கூடாது என்று பெருவிரலைக் காணிக்கையாகக் கேட்ட துரோணரிடம் அவ்விரலை இழந்த பிறகு இடதுகையால் வித்தை பழகி வில் வீரனாக

வாழ்ந்த வரலாற்றை உவமிக்கிறார். கவிதையில் அவனது பெயர் நேரடியாக சுட்டிக் காட்டப் படவில்லை.

கட்டை விரல் வெட்டுண்ட
கதாபாத்திரமாய் மீறி
தான் வளரும் மண்சட்டி
உடைக்கும்
குறுந்தாவரம்

இக்கவிதையை இந்நூலாசிரியர் வருமாறு மொழி பெயர்த்தார்.

A tiny plant
Mirrors the character
Who lost his thumb
Shoots up with violence
And breaks the mudpot.

இம்மொழிபெயர்ப்பில் 'திமிறி ... உடைக்கும் குறுந்தாவரம்' என்பதை

Shoots up with violence
And breaks the mudpot

என்று இரண்டு வரிகளில் மொழிபெயர்த்தார். Violence என்பது மூலப் படைப்பில் இல்லாத போதும் மீறலை அழுத்தமாக உணர்த்துவதற்காக இவர் மேலதிகமாக சேர்த்துள்ளார். Shoots up and breaks the mudpot என்பதே சரியான மொழிபெயர்ப்பாக விளங்கும். இங்கு சேர்த்தல்

*என்ற உத்தி முறையை மொழிபெயர்ப்பாளர் பயன்படுத்தினார்.*

## இரண்டு உவமைகள் வரும்போது

*சில மொழிபெயர்ப்பாளர்கள் ஒரு பாடலில் இரண்டு உவமைகள் வரும் போது ஒன்றை மட்டும் மொழிபெயர்த்து மற்றொன்றை விட்டுவிடுகின்றனர். ஜி.யு.போப் 192ஆம் புறநானூற்றுப் பாடலான 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனத் தொடங்கும் பாடலின் இடையில் வரும்*

நீர்வழிப் படூஉம் புணை போல ஆருயிர்
முறை வழிப்படூஉம்

*என்ற வரிகளை மொழிபெயர்க்கும் போது புணை [படகு] உயிருக்கும், ஆற்று நீர் விதிக்கும் என இரண்டு உவமைகள் இருப்பதை அறிந்தும் ஒன்றை விட்டுவிட்டார்,*

This much praised life of ours, a fragile raft
Borne down the waters of some mountain stream
That o'er huge boulder soaring seeks the plain
The storm with lightning's flash from darkened skies
Descend, the raft goes on fates ordain

*ஆற்று நீர் வழிச் செல்லும் புணை போல உயிர், விதி வழிச் செல்லும் என்று மொழிபெயர்க்காமல் ஆருயிர் போன்ற புணை மழையில் இருந்து வரும்*

ஓடைத்தண்ணிரீல் செல்லும் என்று மொழிபெயர்த்தார். புணை விதி வழிச் செல்லும் என்று மொழிபெயர்த்தார் [the raft goes on fates ordain]. ஆங்கிலத்தில் நதியை விதிக்கு உவமையாகக் குறிப்பிடவில்லை. வானம் இருந்து மின்னல் வெட்டி மழை பொழிந்து நதி ஓடுகிறது என்ற விளக்கம் இருந்தும் நதி வழிச் செல்லும் படகு போல விதி வழிச் செல்கிறது ஆருயிர் என்ற தெளிவை மொழிபெயர்ப்பில் காண முடியவில்லை.

## மெய், உரு சார்ந்த உவமைகள்

மெய் மற்றும் உரு சார்ந்தவற்றை உறுப்பு நலன்கள் மற்றும் பண்பு நலன்கள் என்று பொதுமைப்படுத்தலாம். பெரும்பாலும் மனித உறுப்புகள், கிளை, இலை, காய், பூ போன்றன, பறவை மற்றும் விலங்குகளின் உறுப்புகள் ஆகியன கவிதைகளில் உவமையாகப் பயன்படும். பாரதிதாசன் பாடல் ஒன்றில்

சேலை நிகர்த்த விழியுடையாள் என்றன்
செந்தமிழ்ப் பத்தினி வந்துவிட்டாள்

என்ற வரிகளை மொழிபெயர்த்த தி ஆல்பர்ட் சேல் என்ற மீனின் பெயரை Salmon என்று குறிப்பிட்டுள்ளார். சாலமன் மீன் பெண்ணின் நிண்ட விழிகளைப் போன்ற வடிவம் உடையது. ஆனால் அதன் தமிழ்ப்பெயர் சேல் அல்ல. அதன்

பெயர் காலா / காளா / பெருவஞ்சரம் / கிழாங்கு என்று பலவாறாக வழங்கப்படுகின்றது. சேல் என்ற மீன் கெண்டை மீனைக் குறிக்கிறது. இதன் ஆங்கிலப் பெயர் Carp Fish. மொழிபெயர்ப்பாளர் ஆங்கில வாசகருக்கு நன்கு தெரிந்த அறிமுகமான சால்மன் மீனைக் குறிப்பிட்டதற்கு காரணம், அந்த மீன் வளம் செழிப்பு, புதுப்பித்தல் போன்ற நல்ல பல பண்புகளின் அடையாளமாகத திகழ்வதால் எனலாம். இந்த சாலமன் மீனும் பெண்ணின் விழி போன்ற தோற்றம் உடையது. எனவே பாரதிதாசன் குறிப்பிட விரும்பிய செந்தமிழ்ப் பத்தினி மீனைப் போன்ற அழகான விழிகளை உடையவள் என்பதைக் குறிக்க வளமான செழிப்பான அழகான என்ற கருத்துக்களைக் கொண்ட சால்மன் என்ற மீனை மொழிபெயர்ப்பாளர் பயன்படுத்தியுள்ளார்.

பாரதிதாசன் குறிப்பிட்ட 'செந்தமிழ்ப்பத்தினி' ஆங்கில மொழிபெயர்ப்பிலும் சால்மன் [Salmon Fish] என்ற பயன்பாட்டின் மூலம் அழகானவள், வளமானவள் செழிப்பானவள் என்ற கருத்தைத் தருகிறாள். ஓர் உவமையை மொழிபெயர்ப்பில் கையாள்வதில் உள்ள நுட்பத்தை இந்த சாலமன் என்ற நிகரனைத் தேர்வு செய்ததில் இருந்து அறியலாம். சேல் என்ற கெண்டை மீன் தமிழ்க் கவிதையில் கண்ணின் உருவத்தை மட்டும் குறிக்கவில்லை. அந்த பெண்ணின் வளம், செழிப்பு,

அழகு ஆகியவற்றையும் சேர்த்தே குறிக்கின்றது. கண்கள் ஆரோக்கியத்தின் அடையாளம் ஆகும். உரு, உவமைக்கு பயன்படுத்தும் பொருளை [கண்கள்] விட உயர்வானதாக இருக்க வேண்டும் என்ற தொல்காப்பியரின் கருத்து இங்கு நோக்கத்தக்கது. வெறுமனே fish என்று மொழிபெயர்த்திருந்தால் ஆங்கில வாசகருக்கு கவிதையின் செழுமை புரிந்திருக்க வாய்ப்பில்லை. சாலமன் மீன் அமெரிக்கர்களின் வளமைச் சின்னம். அழகான ஒளி மிகுந்த குளிர்ச்சியான கண்கள் அக்கண்களை உடைய மனிதரின் உடல் நலத்தையும் செழிப்பையும் காட்டும் அடையாளச் சின்னம். எனவே மொழிபெயர்ப்பாளர் உவமையின் சொற்பொருள் மற்றும் உட்பொருளை உணர்ந்து சேர்க்கை என்ற உத்தியைப் பயன்படுத்தி மிகச் சரியான துல்லியமான நிகரனைத் தெரிவு செய்துள்ளார்.

## பண்பு உவமைகள்

கவிதையில் பண்புகளை உவமை சுட்டிப்பாடுவதால் அவற்றின் சிறப்பு மிகைப்படுத்தப்படும். அப்பர், சைவ அடியார்களின் துணிவை இறைப்பற்றை ஒரு பாடலில் விரிவாக விளக்கியுள்ளார். அவருக்கு சமணர்களால் இழைக்கப்பட்ட கொடுமைகளில் இருந்து இறைவன் காப்பாற்றிய அனுபவம் அவருக்கு இருந்ததனால் அவர் சைவ அடியார்கள்

*இறைவனை நம்பி, எந்த துன்பத்தையும் எதிர்கொள்வர் என்று பாடியுள்ளார்.*

நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்ப மில்லை
தாமார்க்கும் குடியல்லோம் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்
கொய்மலர்ச் சேவடி இணையே குறுகினோமே

*இப்பாடலில் முதல் நான்கு வரிகள் சைவ அடியார்களின் பண்புகளை விளக்குவன. இதனை மொழிபெயர்த்த ஏ.வி. சுப்பிரமணியம்*

Subjects we are to none
Death we fear not
Hell we suffer not
We are not weaklings
We know no disease
We are serfs to none
No misery for us
For we are the servitors of the King
Of all beings
Who is bound to none;
He wears white chunks in His ears
Sankara, we are His
And we take refuge
At His lotus feet.

*சிவனடியாரின் பண்புகளை அவர்களின் துணிச்சலை தெள்ளத் தெளிவாக ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். ஏமாப்போம் [=களிப்புற்றிருப்போம்] மற்றும் இன்பமே என்பவற்றை மொழிபெயர்க்காமல் விட்டுவிட்டார். இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்ற முத்தான வாசகத்தை முறித்து விட்டார். எந்நாளும் துன்பமில்லை என்பதை மட்டும்* No misery for us *என்று மொழிபெயர்த்துள்ளார். எஞ்சிய அனைத்தும் எளிய மொழிநடையில் எல்லோருக்கும் புரியும் வகையில் சிறு சிறு வாக்கியங்களாக கருத்துத் தெளிவுடன் நறுக்குத் தெறித்தாற் போல மொழிபெயர்த்தது சிறப்பாகும். இங்கு நீக்கல் என்பது மொழிபெயர்ப்பின் குறையாக உணரப்படுகின்றது.*

**பயன் விளக்கும் உவமைகள்**

*ஒரு செயலின் பயன் அல்லது அதன் விளைவு குறித்து கவிதையில் குறிப்பிடும் போது கவிஞர் உவமையைப் பயன்படுத்தினால் கருத்து விளக்கம் ஆழமாகின்றது. நல்லவனிடம் இருக்கும் செல்வம் எல்லோருக்கும் பயன் அளிக்கும் என்ற கருத்தைச் சொல்ல வந்த வள்ளுவர் அதற்கு உவமையாக உள்ளூரில் பழுத்து நிற்கும் கனி மரத்தைக் குறிப்பிடுகின்றார்.*

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்

*இக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த சந்திரிகா சுப்ரமண்யன்*

A tree that fruits in the hamlet's centre mart
Is wealth that falls to men of liberal heart?

*என்று ஆங்கிலக் கவிதை மரபில் இயைபுச் சுவையுடன் பொருள் தெளிவு பெற அளித்தார்.* Hamlet's centre *என்பது ஊரின் நடுவில் என்பதைக் குறித்தது.* Men with liberal heart *என்ற தொடர் நயனுடையான் [நல்ல மனம் அல்லது கொடைச் சிந்தை உடையவன்] என்ற சொல்லைக் குறித்தது. ஆக, பயன் அல்லது விளைவைக் குறிக்க உவமைகள் பயன்படுத்தும்போது அவை பிற மொழியினருக்கும் பொதுவானதாக இருந்தால் அதனை மொழிபெயர்ப்பதில் எவ்வித இடர்ப்பாடும் தோன்றாது.*

*இலங்கையில் அசோக மாமன்னரின் மகள் சங்கமித்திரையினால் பரப்பப்பட்ட பவுத்த மதம் அங்கே செழித்து வளர்ந்தது. 'ஆசையே துன்பத்துக்குக் காரணம்' என்று சொல்லி அகிம்சையைப் போதித்த புத்தரின் கொள்கைகள் அங்கே செயலற்றுப் போனதன் விளைவு அங்கு தமிழர்களின் வாழிடங்கள் தீக்கிரையாகி எங்கும் புகை மூட்டம் சூழ்ந்தது. இதனைக்*

*கவிதையாக்கிய முத்தமிழ் விரும்பி தமிழருக்கு நேர்ந்த அவலங்களை தீ வைப்பு நிகழ்ச்சியை விளக்கிவிட்டு அதன் முழுமுதல் காரணமாக புத்தரின் கொள்கைகள் மறைக்கப்பட்டதை நுட்பமாக, சுட்டிச் செல்கிறார்.*

இளம்பச்சைக் குடை விரித்த மரத்தடியில்
வாய் கண் காதுகள் அடைபட
இன்னும் தியானத்திலிருப்பாரோ
எங்கும் குருதிச் சொட்டுகள் கூடி
பேராறு ஒன்று புறப்பாடு செய்கிறது.
கடலிடைத் தீவொன்றின் மீது
நெருப்புக் கொடிகள் படர
புத்தம் மறைய
புகை மூட்டம் தெரிகிறது.

*(முத்தமிழ் விரும்பி - வறட்சியின் பாடல்கள்)*

*இக்கவிதையை இந்நூலாசிரியர் ஆங்கிலத்தில் பின்வருமாறு மொழிபெயர்த்தார்.*

Under the shade of the tree
As an umbrellaa of tender green
With the eyes, ears and mouth
Being shut
Is he yet in meditation?
Drops of blood
Gathered everywhere
As a big river;

It begins to flow
On an island in the sea,
Spread the creepers of fire
Buddha-ism vanished
And cloudy smoke visible.

*('Songs of Dryness', Tr. By. C. Rajeswari)*

தமிழ்க்கவிதையில் புத்தம் என்றொரு புதிய சொல் அறிமுகம் செய்யப்படுகின்றது. அதற்கு நிகரன் தேடுவது மொழிபெயர்ப்பாளருக்கு, சவாலான பணியாகும். இதனை Buddhism என்று மொழிபெயர்த்தல் பவுத்த சமயத்தைக் குறிக்கும். ஆனால் மூலத்தில் கவிஞர் சமயத்தைக் குறிக்கவில்லை. புத்தரின் கொள்கைகளைக் குறிக்கவே புத்தம் என்கிறார். எனிவே மொழிபெயர்ப்பாளர் Budhdha-ism என்ற சொல்லை உருவாக்கியுள்ளார். காந்தியிசம், கம்யுனிசம் என்பன போல இச்சொல் உருவாக்கப்பட்டுள்ளது. காந்தியம் என்பது போல புத்தயியம் என்ற சொல்லைக் கவிஞர் பயன்படுத்தவில்லை. அவ்வாறு பயன்படுத்தியிருந்தால் அது உரைநடைத் தன்மை பெற்றிருக்கும். ஆனால் புத்தம் என்றது சுருக்கமும் தெளிவும் பெற்ற அழகான சொல். நாகர்கோயில் கன்னியாகுமரி மாவட்டங்களில் இச்சொல் புழக்கத்தில்

இருந்தாலும் அது புத்தரின் கொள்கைகளைக் குறிக்கவில்லை. ஆக Budhdha-ism என்ற சொல் மொழிபெயர்ப்புக் கவிதையில் புத்தரின் கொள்கைகள் என்ற கருத்தைக் குறிக்கின்றது. இம்மொழிபெயர்ப்பில் புதிய சொல் ஒன்று [new coinage] ஆக்கப்பட்டுள்ளது.

## இணையான நிகரன் தெரிவு

மொழிபெயர்ப்பாளர்கள் கவிதைகளில் உவமையாக ஆட்பெயர்கள் வரும்போது இலக்கு மொழியில் புழங்கும் இணையான பெயர்களை பயன்படுத்துவதும் உண்டு. ஓமர் கய்யாம் பாடல்களில் ஹத்தீம் தாய் என்ற கொடையாளி பற்றிய குறிப்பு வந்த போது தமிழ்க் கவிஞர் அதற்கு இணையாக கர்ணன் என்பதைப் பயன்படுத்தி இருந்தார். உறுதி கொண்ட நெஞ்சினாய் வா வா வா என்ற பாரதியின் கவிதை வரியை மொழிபெயர்த்த பிரேமா நந்தகுமார் டைட்டன் என்ற வீரனின் பெயரை பயன்படுத்தினார். மூலப் படைப்பில் பாரதியார் அர்ஜுனன் என்றோ வீமன் என்றோ பயன்படுத்தாத போதும் மொழிபெயர்ப்பாளர் ஆங்கில வாசகருக்கு டைட்டனைக் குறிப்பிட்டால் எளிதாகப் புரியும் என்ற எண்ணத்தில் ஓர் உவமையைப் புதிதாகச் சேர்த்தார்.

## நிறைவு

*உவமைகள் கவிதையை அழகாக்கவும், கருத்துக்களுக்கு அழுத்தம் அளிக்கவும் பயன்படுகின்றன. செயல், பண்பு, பயன் அல்லது விளைவு சார்ந்த உவமைகளை மொழிபெயர்க்கும் போது சேர்த்தல் [எ-டு சால்மன் மீன்], நீக்கல் [எ-டு. ஏமாப்போம், இன்பமே], ஆக்கல் [எ-டு* Budhaism] *மற்றும் இணைத்தல் [எ-டு கர்ணன், டைட்டன்] எனப் பல செயல்முறைகளைப் பயன்படுத்துகின்றனர். இவற்றில் பொருள் மயக்கம் பண்பாட்டுச் சிக்கல் இல்லாத நிலையில் 'நீக்கல்' என்பது குறையாகத் தெரிகின்றது. பொருள் செறிவும் பொருத்தமும் உடைய இடத்தில் சேர்த்தல் என்பது மொழிபெயர்ப்பு வாசகருக்கு உதவியாக அமைகின்றது.*



முனைவர் செ. இராஜேஸ்வரி

# 4. கவிதை மொழிபெயர்ப்பில் அழகியல் கூறுகள்

*புதுக்கவிதையின் உறுப்புக்களாக உருவகம், படிமம், குறியீடு, இருண்மை, அங்கதம், நகை முரண் போன்றன விளங்குகின்றன. தொல்காப்பியர் கவிதையில் உவமை பெருமிதத்தை உணர்ந்து அதற்கென்று தனி ஒரு இயல் அமைத்தார். உருவகம் உள்ளுறை உவமம் ஆகியவற்றையும் அவர் செய்யுள் உறுப்புகளாக விளக்கினார். 'உவமை உருவகம் ஆகியன மேலும் இறுகிய நிலையில் படிமம் தோன்றுகிறது' என்பார் இலங்கையின் தமிழறிஞர் க. கைலாசபதி.*

*படிமத்தைப்* [metaphor] *பிம்பம்* [image] *என்றும் உருக்காட்சி* [imagery] *என்றும் அழைக்கின்றனர். தமிழ் ஆய்வாளர்கள் படிமத்தையும் உருவகத்தையும் இணைத்து நோக்கினாலும் உருவகம் என்பதில் உவமேயம் உவமானம் என்பது தெளிவாகத் தெரியும். ஆனால் படிமம் என்பதில் உவமானம் [உவமை] தெளிவாகத் தெரிந்தாலும் உவமேயம் [கருத்து]*

தெரியாது. வாசகர் ஒவ்வொருவரும் தனக்கேற்ப வெவ்வேறு உவமேயத்தைத் தெரிவு செய்து பொருள் காண்பர். ஆங்கிலக் கவிதைகளில் எஸ்ரா பவுண்ட், அமி லோவெல், லாரன்ஸ் வில்லியம், கார்லோஸ் போன்றோர் படிமங்களைச் சிறப்பாகப் பயன்படுத்தினர்.

## குறியீடும் படிமமும்

குறியீடு (Symbol) என்பது. சமூகம், சாதி, இனம் மொழி சார்ந்த அனைவருக்கும் பொதுவானது. ஆனால் படிமம் அப்படி அல்ல. அது வேறு வேறு பொருள் உணர்த்தும் ஆற்றல் பெற்றது. குறியீடு என்பதை சொற்பொருள் கொண்டு அறியலாம். ஆனால் படிமம் சொற்பொருளைக் கடந்து நிற்கும். படிமம் என்பது புதுக்கவிதையின் ஜீவநாடி சத்தூட்டும் டானிக் என்றார் சி.சு. செல்லப்பா.

படிமங்களை திறனாய்வாளர்கள் பல்வேறு வகையாகப் பகுக்கின்றனர். கவிஞர் சிற்பி, இயற்கைபடிமம், தொன்மப்படிமம், மூலப்படிமம், கருத்துப்படிமம், சமயப்படிமம் என்கிறார். படிமங்களை மொழிபெயர்க்கும் போது சொற்பொருளை சரியாக மொழி பெயர்த்தால் போதுமானது என்றாலும் அச்சொற்பொருள் மொழிபெயர்ப்பு வாசகருக்கு பொருள் மயக்கம் தருவதாக இருக்கக் கூடாது. சரியான பொருள் சிந்தனையை வழங்க வேண்டும்.

## கவிதை நயம்

இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட தொழிற்புரட்சி மக்களின் வாழ்க்கையில் இருந்த நிதானத்தையும் ஓய்வையும் கலாரசனையையும் மாற்றி அவர்களை விரைவான பரபரப்பான வாழ்க்கைக்குத் தள்ளிவிட்டது. இதனால் நீண்ட கவிதைகளைப் படிக்க அவர்களுக்கு நேரமில்லாமல் போயிற்று. மரபுக் கவிதைகளும் நீண்ட காவியங்களும் படிப்பாரற்றுப் போயின. சிறிய கட்டற்ற கவிதைகள் வரத் தொடங்கின. கடவுள், மன்னர் மற்றும் பிரபுக்கள் போன்ற மேட்டுக்குடியினர் பற்றிய கலைப் படைப்புகளும் மறையத் தொடங்கின. சாமானிய மனிதர்கள் பாடு பொருளாயினர். கவிதை, கதை போன்றவற்றின் உருவும் உள்ளடக்கமும் மாற்றம் பெற்றன.

இங்கிலாந்தில் தொடங்கிய மாற்றம் உலகெங்கும் பரவியது. கட்டற்ற கவிதைகளின் இலக்கிய உத்திகளில் படிமம், குறியீடு, உருவகம் போன்றவை முக்கியத்துவம் பெற்றன. இவை எதையும் தெளிவாகக் குறிப்பிடாமல் வாசிப்போரின் புரிதலுக்கும் அனுபவத்துக்கும் இடமளிக்கும் வகையில் அவர்களின் பங்கேற்பையும் நாடியனவாக அமைந்தன.

தமிழகத்தில் மகாகவி பாரதியார் வசன கவிதை எழுதினார். வால்ட் விட்மன், எஸ்ரா பவுண்ட் ஆகியோரின் கவிதைகள் இங்கு

மொழிபெயர்க்கப் பெற்றன. சந்தம், யாப்பு ஆகியவற்றைப் புறந்தள்ளிவிட்டு படிமம், குறியீடு, உவமை, உருவகம் போன்றவற்றைக் கொண்டு கவிஞனின் கருத்தை சுருக்கமாகப் புலப்படுத்தும் நிலை உருவானது. டி.எஸ் எலியட் எழுதிய ‘பாழ் நிலம்’ என்ற கவிதை முதல் படிமக் கவிதையாக அமைந்து புகழ் பெற்றது.

இமேஜிசம் (Imagism) என்ற இயக்கம் அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் தோன்றியது. அமெரிக்கக் கவிஞர் எஸ்றா பவுண்ட் கிரேக்கப் பெண்பாற் புலவர் சாஃபோ கவிதைகளைப் படித்துத் தேர்ந்த இரு கவிஞர்களை அறிமுகம் செய்தார். இவர்கள் பண்டைய இலக்கியப் பெருமைகளைப் பறை சாற்றுவதிலும் அக்கறை காட்டினர். அதே வேளையில் தமது புதுக் கவிதைகளைப் பழகு மொழியில் [செய்யுள் மொழியில் அல்ல] படைத்தனர். இந்த மொழி எளிமை புதுக் கவிதை உலகுக்கு இன்னும் பல கவிஞர்களைக் கொண்டு வந்தது. மரபு சாரா கவிதை பின்னர் கட்டற்ற கவிதை, நவீன கவிதை, புதுக் கவிதை எனப் பெயர் மாறிக்கொண்டே வந்தது.

புதுக் கவிதை உத்திகளுள் ஒன்றான படிமம் என்பது ஐம்புலன்களால் உணர்ந்துகொள்ளக் கூடிய ஒரு கருத்து விளக்கமாக அமைந்தது. கவிஞன் சொற்களால் விளக்கிக் கூறுவதை

விடவும் படிமங்களால் உணர்த்தும் போது வாசகன் கவிஞனின் கருத்தை முழுமையாகப் புரிந்து கொள்கிறான். ஒவ்வொரு கவிஞருக்கும் எனச் சில தனிப் பயன்பாட்டுப் படிமங்கள் உள்ளன. அவர்கள் அதே படிமங்களை வெவ்வேறு பொருளில் திரும்பத் திரும்பப் பயன்படுத்துவதுண்டு. பொதுவாக இயற்கை சார்ந்த மரம், செடி, கொடி, பறவை, விலங்குகள் போன்றவை படிமங்களாகப் பயன்படுகின்றன.

குறியீடு என்பது ஒரு பொருளுக்கு மற்றொரு பொருளைப் பதிலியாகக் காட்டுவதாகும். ஆனால் படிமம் என்பது இதற்கு இது என வரையறுத்துக் கூற முடியாத வகையில் கட்டற்ற வாய்ப்புகளும் பொருண்மையும் கொண்டதாகும். இத்தகைய இலக்கியப் பின்புலத்தின் அடிப்படையில் கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளை ஆராயலாம். அவரது கவிதைகள் ‘எந்த இயக்கத்தின் சாயலோ எந்தத் தத்துவத்தின் அடிப்படையோ, எந்த நம்பிக்கையின் ஆசிகளோ இல்லாமல் அசலான தனித்துவத்தின் கவிதைகள்’ என்று கூறிய கவிஞர் இளஞ்சேரலின் கருத்தும் இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும்.

கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் படிமம், குறியீடு, உவமை, உருவகம் எனப் பல வகை கவிதை நயங்களும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இதில்

எதுவும் வலிந்து திட்டமிட்டுப் புகுத்தப்பட்டதன்று. நயம் ஊட்டும் உத்திகள் அனைத்தும் இயற்கையான கவிதைப் போக்கில் அமைந்தவை.. கவிஞர் தனது இலக்கிய உத்திகளுக்குக் கருவியாக கிளை, மரம், செடி, புதர், பறவை சிற்பம், கானல் நீர் போன்ற சொற்களைப் பயன்படுத்துகிறார். இவர் கூர் தீட்டப்பட்ட கத்தியைப் போலப் புரிதலைக் கூர்மையாக்குகின்றன.

'பிரமிளுக்குக் கருடனைப் போல தேவதேவனுக்குப்பாறைஎனில்தேவதச்சனுக்குக் கூழாங்கற்கள், பூமா ஈஸ்வர மூர்த்திக்குக் கண்ணாடியாகிற கவிதையின் உயிர்ச்சொல். இங்கு முத்தமிழ் விரும்பிக்கு மரக்கிளை. பல்வேறுரூபங்களும்அரூபமும்பெருமரங்களின் உடலிலிருந்து கிளைகள் நமது தத்துவ மரபின் வாழ்விற்கு உணர்த்தும் படி, மான்களும் உள்ளார்ந்த குறியீடுகளும் மிகப் புதுமையானது. கிளை சொல்லும் கதைகள் கவித்துவத்தின் கட்டமைப்பைப் பேசுவதாகிறது. 'இருத்தலியல் சார்ந்து நிற்கிற கவி மூலமாகிறது' என்று பாராட்டிய கவிஞர் இளஞ்சேரல் கிளை என்ற சொல் இடம்பெறும் கவிதை வரிகளையும் தனது கட்டுரையில் பட்டியலிட்டுள்ளார்.

'நிரந்தரம்' என்ற கவிதை ஒரு கண்ணாடிக் குடுவையை வருணிக்கிறது.

அடி பெருத்தும்
நுனி விரிந்தும்
தரம் பிரித்து
வனையும் வடிவத்தில்
எப்போதும் குறுகிக் கழுத்து நெறிபட்டு
அழுத்தம் கூடி
அந்தக் குடுவையின் குரல்வளை
*[முத்தமிழ் விரும்பி - வறட்சியின் பாடல்கள்]*

இக்கவிதை எதனைக் குறிக்கிறது என்பது கவிதையில் வேறு எங்கும் குறிப்பாகக் கூட சுட்டப்படவில்லை. அவரவர் தத்தம் அறிவுக்கும் அனுபவத்துக்கும் ஏற்ப அதன் பொருளைப் புரிந்து கொள்ளலாம். ஒரு திறனாய்வாளர் அக்கவிதை மத்தியதர வர்க்கத்தினரின் கழுத்து நெறிபடுவதை குறிப்பதாகக் தெரிவித்தார். இதனை ஆங்கிலத்தில் **'Permenant'**

The bottom widened
The tip broadened
Quality defined
Designed shapes
Always narrowed
With strangled stems
Pressed more
The neck of the glass
*(Songs of Dryness', Tr. By. C. Rajeswari)*

என்று இந்நூலாசிரியர் மொழிபெயர்த்தார். இம்மொழிபெயர்ப்பில் சொற்பொருள் வரிக்கு

வரி சரியாக இருந்தாலும் ஆங்கிலத்தில் வாசிப்போரின் உள்ளக்கருத்தின் படியே பொருள் உணரப்படும். வாசகர் வாழ்க்கை பற்றிய பொதுவான விளக்கம் என்றும் இக்கவிதையை உணரலாம். காதலைப் பற்றிய அனுபவம் என்றும் பொருள் கொள்ளலாம். காதலைத் தொடர்ந்து வந்து கழுத்தை நெரிக்கும் திருமண வாழ்க்கை என்றும் உணர்ந்து கொள்ளலாம். இவ்வாறு படிமங்கள் அவரவர் உள்ளக்கருத்துக்கும் அனுபவத்துக்கும் ஏற்ப பொருள் கொள்ளும் வகையில் அமையும்.

## குறியீடு [Symbol]

குறியீடு என்பது பொருள் கொள்ளத் தெளிவானது. ஆனால் மூல மொழியிலும் பெறு மொழியிலும் குறியீடு ஒரே பொருளைத் தருமா என்பது கேள்விக் குறி. இயற்கை குறியீடுகளை பயன்படுத்தும் போது பொருள் மயக்கம் ஏற்படலாம். தொன்மக் நிகழ்வுகளைப் பொதிந்து வைத்துள்ள குறியீடுகள், மொழிபெயர்ப்பு வாசகருக்கு புதியன என்பதால் அடிக்குறிப்பில் அந்தத் தொன்மக் கதையைச் சுருக்கமாக குறிப்பிட வேண்டும்,

மேனகையால் விசுவாமித்திரரின் தவம் கலைந்தது என்ற கதையை அடியொற்றி இன்று ஒரு கவிதை வந்துள்ளது. பலர் தவம் செய்வதாக

*போலி வாழ்க்கை நடத்துகின்றனர் அவர்கள் மேனகையின் வருகைக்காக மனதுக்குள் ஏக்கத்துடன் காத்திருக்கின்றனர் என்ற கருத்தில் எழுதப்பட்ட கவிதை .*

**மௌனத்தில்**

காவி உடுத்தி
மான் தோல் விரித்து
கை விரல்கள்
மாலை ஒன்றை உருட்டிக் கொண்டு
காத்திருக்க
எங்கே மேனகை?

*[முத்தமிழ் விரும்பியின் 'பூமர நிழல்']*

*விசுவாமித்திரர் தயாராக இருக்கிறார். மேனகை இன்னும் வரவில்லை என்பது கவிதையின் நேர் பொருள். இந்தக் கவிதையின் தலைப்பான 'மௌனத்தில்' என்பது முனிவரின் மௌனம் கள்ளத்தனமானது, வஞ்சகம் நிறைந்தது என்பதை உணர்த்துகிறது. எங்கே மேனகை? என்ற கடைசி வரி முனிவரின் குரலாக உணரப்படும் போது அவரது கள்ளத்தனம் புரிகிறது. அதுவே பார்வையாளரின் வினாவாகப் புரிந்து கொள்ளப்படும் போது இவர் வெகு காலமாகத் தவம் செய்கிறாரே இன்னும் மேனகை வரவில்லையே என்று அப்பாவித்தனமாக கேட்பது போல் தோன்றுகிறது. இந்தக் கேள்வியை வாசகரின் மனம் எழுப்பும்*

கோணத்தில் இருந்தே இதன் பொருள் அமையும். ஆங்கிலத்தில்

**In Silence**

Wearing saffron cloth
Spreading the deer's hide
Fingers roll the string of beads,
And waiting,
Where is Menaka?

*(The Shade of the flowering Tree', Tr. By. C. Rajeswari)*

என்பது ஆங்கில வடிவம் ஆகும். ஆங்கிலத்தில் தமிழில் உள்ளது உள்ளபடி மொழிபெயர்ப்பாளர் மொழிபெயர்த்துள்ளார். ஆங்கில வாசகருக்கு மேனகை என்பவள் ஆண் மயக்கி [seducer] என்று தெரிந்திருக்க நியாயமில்லை.

மேனகை என்றால் விசுவாமித்திர முனிவரின் தவத்தைக் கலைத்தவள் என்பது பொதுவான புரிதல். கவனத்தைக் கலைக்கும் தன்மைக்கு மேனகை என்பது இந்தியக் குறியீடு எனலாம். இதற்கு அடிக்குறிப்பு மூலமாக விளக்கம் அளித்தால் இலக்குமொழி வாசகர் புரிந்து கொள்வர். அதன் பிறகு குறியீட்டுப் பொருள் புரியத் தொடங்கும். குறியீடு என்பது ஒரு குறிப்பிட்ட சமுகத்துக்கு சமயத்துக்கு இனத்துக்கு பொதுவானது என்பதால் அடுத்த சமூகத்தவருக்கு சமயத்தவருக்குத் தெரிவதில்லை.

**உருவகம் [Metaphor]**

உருவகம் என்பது பொருளே உவமையாக வருவதாலும். மலர் விழி என்பதில் மலர் உவமையாக வருகின்றது. விழி மலர் என்றால் விழியே மலர் என்று பொருள் தரும் போது உவமை பொருளாகி விடுகிறது. உவமையில் இரண்டும் தனித்தனியாக இருக்கும் உருவகத்தில் இரண்டும் ஒன்றாகிவிடும். விழியே மலர் தான் என்னும் போது விழி வேறு மலர் வேறு என்பதல்ல. இரண்டும் ஒன்றே ஆகும். தொல்காப்பியர் உருவகத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது இதுவும் உவமம் என்கிறார்.

பொருளே உவமம் செய்தனர் மொழியினும்
மருளறு சிறப்பின் அஃது உவம மாகும்.
[1230]

பொருளே உவமம் என்று தொல்காப்பியர் குறிப்பிடுவது உருவகத்துக்கான சிறந்த விளக்கமாகும்.

புலம் என்ற கவிதையில் தன் முன்னோர் விற்று விட்ட நிலத்தை தேடி வந்து பார்ப்பன். அந்தப் புஞ்சைக் காட்டில் காய்ந்து நிற்கும் வேல மரத்தின் கிளைகளில் நடுவே சந்திரோதயத்தைக் காண்கிறான்.

ஒரு யுகத்துக்கு முன்னே
விற்றுப் பெயர்ந்த

புஞ்சைக் காட்டினிடை நிற்கும்
உதிர்ந்த வெள்ளை வேல மரத்தின்
மேலே கிளைத்தது
வெண்ணிலாப் பழம்

*[முத்தமிழ் விரும்பி - வறட்சியின் பாடல்கள்]*

*அவன் கண்ணில் பட்ட ஒற்றை வேல மரத்தில் இலைகள் எதுவும் இல்லை. தரையில் ஈரம் இல்லை. அது புஞ்சைக்காடு. வானம் பார்த்த பூமி, வறட்சியான பகுதி. ஆனால் அங்கு அந்நேரம் உதித்த முழு நிலா அவன் மனதில் ஒரு வெளிச்சத்தை மகிழ்ச்சிக் கீற்றைத் தோற்றுவித்தது. அந்த நிலா வேல மரத்தின் கிளையில் பழுத்த பெரும்பழம் போல அவனுக்குத் தோன்றுகிறது.*

உதிர்ந்த வேல மரத்தின்
மேலே கிளைத்தது
பழம் போன்ற வெண்ணிலா

*என்றிருந்தால் அது உவமைத் தொடராகி இருக்கும். வெண்ணிலா என்பது பொருள், பழம் என்பது உவமை. ஆனால் இங்கு பொருளே உவமை ஆயிற்று. வெண்ணிலாவே பழம் ஆயிற்று. இக்கவிதையில் உவம உருபு இல்லை. கவிஞர் பொருளையும் உவமையையும் தனித்தனியாக பிரிக்காமல் இரண்டையும் ஒன்றாக்கி உள்ளார். எனவே இது உருவகமாகி*

நிற்கிறது. இங்கு பழம் என்பது வெண்ணிலா. வெண்ணிலா என்பது பழம். தொல்காப்பியர் குறிப்பிட்டது போல பொருளே உவமம். இதன் ஆங்கில மொழிபெயர்ப்பில்

Before an era
That dryland sold
And we left
In it stands a white Vela tree
Leaves shed
Branched above
A white moon fruit.

*(Songs of Dryness, Tr. By. C. Rajeswari)*

வெண்ணிலா பழம் என்பது a white moon fruit என்று தரப்பட்டுள்ளது. வெண்ணிலா பழம் மேலே கிளைத்தது என்பதை branched above, a white moon fruit. என்ற வரிகள் சொற்பொருள் பிறழாமல் உணர்த்துகின்றன. ஆங்கிலத்தில் இக்கவிதையை வாசிக்கும் போது அவன் அந்த புஞ்சைக்காட்டில் நின்று வேல மரத்தின் கிளைகளின் ஊடே நிலாவைக் காணும் காட்சியும் மனக்கண்ணில் விரிகிறது.

## நிறைவு

கவிதை மொழிபெயர்ப்பில் உவமை, உருவகம், படிமம், குறியீடு போன்ற அழகியல் கூறுகளை ரசித்து உணர்ந்து மொழிபெயர்த்தால்,

*இலக்கு மொழி வாசகரும் மொழிபெயர்பை ரசித்து வாசிப்பார். மூலமொழிப் படைப்பு தந்த அனுபவத்தை இலக்கு மொழிப் படைப்பும் அளிக்க முடியும். ஒரு கவிதை வாசகருக்கு மன நிறைவைக் கொடுத்துவிட்டால் அடுத்தடுத்து வாசகர்கள் அந்த கவிஞரின் கவிதைகளை அந்த மொழிபெயர்ப்பாளரின் படைப்புகளைத் தேடிப் படிக்கத் தொடங்கிவிடுவர். இத்தேடல் மொழிபெயர்ப்பின் வெற்றியாகக் கருதப்படும்.*



# துணை நூல் பட்டியல்

1. Eugene A. Nida, The theory and practice of translation, United Bible societies, Leiden, 1969.
2. The Oxford book of verse in English translation (Chosen and edited by Charles Tomlinson), Oxford University Press, 1980
3. The burning urn, (studies in Tamil poetry), K,. Raja, Parthiban Pathippagam, Trichy 1994.
4. Literature in Translation, Pramod Talgeri, S. B. Verma, (Edrs), popular Prakashan, Bombay, 1988.
5. Mullai Pattu, T. P. Meenakshi Sundaram Orient longman Madras 1958
6. J. C. Catford, Linguistic Theory of translation, Oxford University Press London 1965
7. Problems of translation, C.D. Narasimhaiah, C.N.Srinath, A. Dhvanyaloka Publication, Mysore, 1986
8. Bharati as a translator, C Viswanathan Annam Private Limited, Sivagangai, 1981.
9. The Ayodhya Cando of the Ramayana, as told by Kamban, translated from Tamil by C Rajagopalachari, Sahitya Academy, New Delhi 1961
10. Selected poems of Bharathidasan, Bharathidasan University 1991
11. Tamil literature, Kamil V Zvelebil, Otto Harrassowitz, Wiesbaden, 1974.
12. Quiescence and passion, the vision of Arunagiri Tamil mystic, translation with introduction and notes, Fred W. Clothey, Madurai Kamaraj University, Madurai, 1984

and Others



# வீணையடி நீ எனக்கு

**- பாரதியார்**

பாயு மொளி நீ யெனக்கு, பார்க்கும் விழி நானுனக்கு,
தோயும் மது நீ யெனக்கு, தும்பியடி நானுனக்கு.
வாயுரைக்க வருகுதில்லை, வாழி நின்றன் மேன்மையெல்லாம்;
தூயசுடர் வானொளியே! சூறையமுதே! கண்ணம்மா!

வீணையடி நீ யெனக்கு, மேவும் விரல் நானுனக்கு;
பூணும் வடம் நீ யெனக்கு, புது வரிம் நானுனக்கு;
காணுமிடந்தோறு நின்றன் கண்ணி னொளி வீசுதடீ
மாணுடைய பேர ரசே! வாழ்வு நிலையே! கண்ணம்மா!

வான மழை நீ யெனக்கு வண்ண மயில் நானுனக்கு;
பான மடி நீ யெனக்கு, பாண்டமடி நானுனக்கு;
ஞான வொளி வீசுதடி, நங்கை நின்றன் சோதிமுகம்,
ஊனமறு நல்லழகே! ஊறு சுவையே! கண்ணம்மா!

வெண்ணிலவு நீ யெனக்கு, மேவு கடல் நானுனக்கு;
பண்ணு சுதி நீ யெனக்கு, பாட்டினிமை நானுனக்கு;
எண்ணியெண்ணிப் பார்த்திடிலோர் எண்ணமில்லை நின்சுவைக்கே;
கண்ணின் மணி போன்றவளே! கட்டியமுதே! கண்ணம்மா!

வீசு கமழ் நீ யெனக்கு,விரியுமலர் நானுனக்கு;
பேசுபொருள் நீ யெனக்கு,பேணுமொழி நானுனக்கு;
நேசமுள்ள வான்சுடரே! நின்னழகை யேதுரைப்பேன்?
ஆசை மதுவே!கனியே!அள்ளூ சுவையே கண்ணம்மா!

காதலடி நீ யெனக்கு, காந்தமடி நானுனக்கு;
வேதமடி நீ யெனக்கு, வித்தையடி நானுனக்கு;
போதமுற்ற போதினிலே பொங்கி வருந் தீஞ்சுவையே!
நாதவடி வானவளே! நல்லஉயிரே கண்ணம்மா!
நல்லவுயிர் நீ யெனக்கு, நாடியடி நானுனக்கு;
செல்வமடி நீ யெனக்கு, சேமநிதி நானுனக்கு;
எல்லையற்ற பேரழகே! எங்கும் நிறை பொற்சுடரே!
முல்லைநிகர் புன்னகையாய்!மோதுமின்பமே! கண்ணம்மா!



## இந்நூலாசிரியரின் பிற நூல்கள்

## முனைவர் செ. இராஜேஸ்வரி

**எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்**

1-21. வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர். என்ற பெயரில் தொடங்கும் வரிசையில் 21 நூல்கள்.
22. சென்னைப் பெருநகராட்சியின் முன்னாள் மேயர் மனித நேயச் செம்மல் சைதை சா. துரைசாமி அவர்களின் சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும்

**ஆங்கிலம்>தமிழ்**

23. Indian Women-Changes and Challenges (Co-Author)
24. The Globalisation : An Urban Theology
25. Water Privatisation (for PET, Madurai)
26. Assisted reproductive technologies and its Impact on Women (SIRD, Madurai)
27. Eco Vision and Mission
28. Bachelor's Study Materials for Social Science [IGNOU, Madurai] and others...

**தமிழ் >ஆங்கிலம்**

**கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகள்**

29. Shade of the Flowering Tree
30. Songs of Dryness
31. Speaking with You
32. Language of Love
33. A Lady at the little gate
34. Honey Hive
35. Ambrosial Kiss (Editor)
36. Therapist of the Finest Art
37. Following Dusty Feet (in print)

**பேரா. முனைவர் ஞானசேகரனின் நூல்கள்**

38. Emerging Mallarism
39. Festival of Lord Indra
40. Role of Devendirars in Indian war of Independence (Sundaralingam)
41. Mallariyan Literature
42. Re reading of Pallu literature
43. Frontyard without My Dad (Poem)

**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

44. பண்பாட்டு நகர்வுகள் (தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு)
45. பெண் தெய்வ வழிபாடு
46. தேவேந்திரன்
47. மருதநிலப் பெண் தெய்வங்கள்
48. இருநிலத்தில் திருமுருகன்
49. முன்னோர் வழிபாடு
50. வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும்
51. யானைக் கடவுள்

**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

52. பாடுபொருளும் பாசப்பொருளும்
53. பூ மர நிழலின் களமும் காலமும்
54. "2020 தைமாதத்தில் இன்று" கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு
55. கவிதையில் காதல்
56. கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள்

**மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்கள்**

57. மொழிபெயர்ப்பியல் ஆய்வு
58. கவிதை மொழிபெயர்ப்பு
59. நவீன மொழிபெயர்ப்பு உத்திகள் (Co-author)

**ஆங்கிலக் கவிதை மொழிபெயர்ப்பு**

60. எட்டுத்திக்கும் செல்வீர்
61. அவன் கடவுளுக்கு நிகரானவன்
62. செக்கச் சிவந்த ரோஜா
63. மணலும் நுரையும் - கலீல் ஜிப்ரான்
64. பாடல்கள் 14 - கலீல் ஜிப்ரான்

**சிறுகதைத் தொகுதி**

65. அமராவதியின் காதல்




₹.200